நாளுக்கு நாள்

உங்கள் சருமம் அதிக அழகைப்பெறும்!

கேடில் கலந்த சோப் ரெக்ஸோனா ஒன்றே
அது உங்கள் சருமத்திற்கு புத்துயிரளிக்கும்
பரிசுத்தத்தையும் புதுப்பொலிவையும் தரும்.

தினமும் தவறாமல் ரெக்ஸோனா சோப் உபயோகிக்க ஆரம்பியுங்கள். வெகு சீக்கிரத்திலேயே உங்கள் சருமம் ஆச்சரியமான மாறுதலடைவதை காண்பீர்கள். சருமத்தை சுத்தம் செய்து, மிருதுவாக்கி ஆரோக்கிய மூட்டும் சக்திவாய்ந்த தைலங்களால் விஞ்ஞான முறைப்படி தயாரிக்கப்பட்ட கலப்பு மருந்து கேடில். இது உங்கள் சருமத்தை அதிக ஆரோக்கியமுள்ளதாகவும், அப்பழுக்கற்றதாகவும், திடமாகவும் செய்ய உதவுவதுடன், நீடித்துநிற்கும் புதியதொரு சோபையையும் பெறச்செய்யும்.

கேடில் சேர்ந்த ரெக்ஸோனாதான் இதைச்செய்கிறது!




# ரெக்ஸோனா
# சோப்

RP. 86-172 TM

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 7
இதழ் 25

ஜனவரி 18

சர்வசித்து ஹ
தை 5



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.




மலர் 7 } தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 25

# என்ன சேதி?

## விண் கூக்குரல்

அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகரும் என்று சொல்லுவதுண்டு. அதுபோல, புளுகுமேல் புளுகாகக் கூறினால் அது உண்மையாகி விடும் என்பது பாகிஸ்தான் சர்க்கார் தலைவர்கள் கையாண்டு வரும் முறை என்று தோன்றுகிறது.

இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் நிதி விஷயமாகச் சமீபத்தில் ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டதல்லவா? அந்த ஒப்பந்தத்தின் ஷரத்துகள் நிறைவேறுவது, பாகிஸ்தான் மற்ற விஷயங்களையொட்டி நடந்து கொள்ளும் முறையையே பொறுத்திருக்கிறது என்பதை, அதைப் பற்றி முதன் முதலாக அறிக்கை விடுத்த போதே சர்தார் பட்டேல் சந்தேகத்துக்கு இடமின்றிக் கூறிவிட்டார். ஆனால் காஷ்மீரப் பிரச்னை சம்பந்தமாய் பாகிஸ்தான் ஒழுங்காக நடந்துகொள்ளவில்லை. எனவே, ஒப்பந்தப்படி பாகிஸ்தானுக்குக் கொடுக்க வேண்டிய எழுபத்தைந்து கோடி ரூபாயில், ஏற்கெனவே இருபது கோடி ரூபாய் கொடுத்தது போக மீதியை இந்திய சர்க்கார் நிறுத்தி வைத்தனர். ஏனெனில், தற்போது பாகிஸ்தான் சர்க்கார் போகிற போக்கில் மேற்படி தொகையை அவர்களுக்குக் கொடுப்பது, தன்னைக் கொல்ல விரும்பும் விரோதியின் கையில் துப்பாக்கியைக் கொடுப்பதற் கொப்பாகும். அப்பட்டமான இந்த உண்மையை அறிந்து கொள்ளுவதற்கு நுணுக்கமான சட்ட வியாக்கியானமோ, தர்க்க சாஸ்திர விமர்சனமோ, அரசியல் தர்ம ஆராய்ச்சியோ தேவையில்லை. அப்படியிருந்தும். இந்திய சர்க்கார் ஏதோ துரோகம் செய்து விட்டதாகப் பாகிஸ்தான் தலைவர்கள் கூக்குரலிட்டு வருகிறார்கள். அவர்களுடைய கூக்குரலுக்கு சர்தார் பட்டேலும் இந்திய சர்க்கார் நிதி மந்திரி ஸ்ரீ ஆர். கே. ஷண்முகம் செட்டியாரும் அளித்துள்ள பதில்களிலிருந்து உலகம் உண்மையை அறியும்.

## இணையற்ற பெருந்தன்மை

பாகிஸ்தானின் நிதி நிலைமை படுமோசமாகி விட்டதென்பது பகிரங்க இரகசியமாகும். எனவே. இந்திய சர்க்காரிடமிருந்து பெறும்தொகையையும் இதர ராணுவ சாதனங்களையும் கொண்டு தங்களுடைய நிதி நிலைமையைச் சீர்திருத்திக் கொள்ளுவதுடன், காஷ்மீர யுத்தத்தையும் தொடர்ந்து நடத்தலாமென்று பாகிஸ்தான் தலைவர்கள் கருதுகின்றனர். அதனால் தான் அவர்கள், "சமரசப் பேச்சு நடந்தபோது காஷ்மீரப் பிரச்னையையே இந்திய சர்க்கார் எடுக்கவில்லை" என்ற கலப்பற்ற புளுகைக் கூசாமல் கூறுவதாக சர்தார் குறிப்பிட்டிருக்கிறார்.

காஷ்மீரப் பிரச்னை மாத்திரமல்ல, மற்றப் பிரச்னைகளும் திருப்திகரமாகத் தீர்ந்தாலன்றி, நிதி ஒப்பந்தத்தை இந்திய சர்க்கார் நிறைவேற்ற மாட்டார்கள் என்பது, பேச்சு வார்த்தைகள் ஆரம்பமானது முதல் பாகிஸ்தான் தலைவர்கள் அறிந்த விஷயமே என்று நிதிமந்திரி கூறுகிறார். பாகிஸ்தான் சர்க்காருக்கு மனமாற்றம் ஏற்பட வேண்டும் என்பதற்காகவே இந்திய சர்க்கார் நிதிப் பிரச்னை சம்பந்தப்பட்ட வரையில் தாராளமாக நடந்துகொண்டு, தங்களுடைய நல்லெண்ணத்தையும் நட்பு உணர்ச்சியையும் தெரிவித்தார்கள். ஆனால் பாகிஸ்தான் சர்க்காருக்கு மனமாற்றம் ஏற்படவில்லை. அப்படியிருந்தும், இந்திய சர்க்கார் தங்களுடைய நலன்களைக்கூட பொருட்படுத்தாமல் பாகிஸ்தானுடன் நல்லுறவு ஏற்பட்டு, இந்தியாவிலும் பாகிஸ்தானிலுமுள்ள கோடிக்கணக்கான ஜனங்கள் பல்வேறு துன்பங்களிலிருந்தும் விடுபட வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன், மீதி ஐம்பத்தைந்து கோடி ரூபாயையும் கொடுக்க முடிவு செய்துள்ளனர். இணையற்ற இந்தப் பெருந்தன்மையான செய்கையாவது பாகிஸ்தான் மனதை மாற்றி, எல்லாத் தகராறுகளும் தீர்ந்து க்ஷேமம் உண்டாக வழிகோலுமாக.







ஹைதராபாத் நாடகம் இன்றைய காட்சி!

பாகிஸ்தான்

நிஜாம்

பாகிஸ்தானுக்கு நிஜாம் இருபது கோடி ரூபாய் கடன் உதவி புரிந்து தோள் கொடுத்து அதைத் தாங்குகிறார்!

# மடமையை ஒழிப்போம்

ஒரு விஷயத்தில் தாங்கள் மகா புத்திசாலிகள் என்பதை பிரிட்டிஷ்காரர்கள் நிரூபித்து விட்டார்கள்.

அவர்களுடைய புத்திசாலித்தனம் சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டியதாகும்!

பிரிட்டிஷார் பிரித்தாளும் சூழ்ச்சிக்காரர்களாக இருக்கலாம்; அரசியல் பித்தலாட்டக்காரர்களாக இருக்கலாம்; பலாத்காரத்திலே பிறந்து வளர்ந்து மடிபவர்களாகவும் இருக்கலாம். ஆனால் அவர்கள் செய்த உத்தபோத்தமமான ஒரு காரியம், அவர்களுடைய குறைகளையெல்லாம் மறைத்து அவர்களுக்கு என்றும் அழியாத பெருமையைக் கொடுத்திருக்கிறது என்பதில் மாத்திரம் சந்தேகமில்லை.

பலாத்காரத்திலே நூறு சத விகித நம்பிக்கையுள்ள அவர்கள், அஹிம்சா மூர்த்தியான மகாத்மா காந்திஜியின் கட்டளையைச் சிரமேற் கொண்டு, இந்திய சாம்ராஜ்யத்தையே துறந்து விட்டார்கள்!

"இந்தியாவை விட்டு வெளியேறுங்கள்" என்று காந்திஜி பிரிட்டிஷாருக்குக் கட்டளையிட்டபோது, "இதென்ன பைத்தியக்காரத்தனம்! சர்வ ஆயுத வல்லமை பொருந்திய பிரிட்டிஷார், 'வெளியேறு' என்று சொன்னதும் வெளியேறி விடுவார்களா?" என்று உலகம் நகைத்தது.

எனினும், கண்முன் நடந்ததென்ன?

காந்திஜியின் ஆத்ம சக்தி பிரிட்டிஷாரின் சாம்ராஜ்ய வெறியைத் தணித்து விட்டது!

"சரி, அப்படியே வெளியேறுகிறோம். அடுத்த வருஷம் வெளியேறுகிறோம்" என்று பிரிட்டிஷார் சொன்னார்கள்.

"அடுத்த வருஷமா? ஏன்? இப்போதே வெளியேறிவிடுங்கள்; நன்றை இன்றே செய்யுங்கள்" என்றார் மகாத்மா காந்தி.

அதற்கும் 'சரி' யென்று கூறிச் சென்ற வருஷம் ஆகஸ்டு மாதத்திலேயே வெளியேறி விட்டார்கள்!

"இந்தியாவில் இருநூறு ஆண்டுகளாக இருந்து வந்துள்ள நம்மை வெளியேற்றும் விஷயத்தில் காந்திஜி ஏன் இவ்வளவு அவசரப்படுகிறார்" என்று பிரிட்டிஷார் ஆட்சேபிக்கவில்லை.

தர்மம் என்றோ, நியாயம் என்றோ கூற முடியாவிட்டாலும், மற்றப்படி தங்களுக்குச் சகல விதத்திலும் லாபகரமாக இருந்து வந்த மகத்தான சாம்ராஜ்யத்தைத் துறக்கும் தியாக புத்தியைப் பிரிட்டிஷாருக்கு உண்டு பண்ணியது காந்திஜியின் ஆத்ம சக்திதான்.

பலபல நூற்றாண்டுகளாக வேரூன்றி வியாபித்துக் கிடந்த பிரிட்டிஷாரின் சாம்ராஜ்ய வெறியை ஒழித்த பாரதத் தவப்புதல்வரின் ஆத்மசக்தி, இந்தியாவில் காளான்போல் தோன்றி முளைத்துள்ள வகுப்பு வெறியை ஒழிப்பதில் வெற்றி பெறாமற் போய்விடுமா?

லாபகரமான சாம்ராஜ்ய வெறியையே பிரிட்டிஷார் ஒழித்திருக்கும் போது, இந்தியாவுக்கு எள்ளளவும் லாபமில்லாத, இழிவையும் எல்லையற்ற இன்னல்களையும் தவிர வேறெவ்வித பலனையும் அளிக்க முடியாத மடமையை, அதாவது வகுப்பு வெறியை இந்தியர்கள் ஒரு கணமும் தாமதமின்றி ஒழிக்க வேண்டியது அத்யாவசியமாகும்.

* * *

சுதந்திரம் இழந்து கிடந்த இந்தியாவில் அன்னியரின் ஆதிக்கத்தைக் கண்டித்து மகாத்மா காந்தி பன்முறை

யும் உண்ணுவிரதம் அனுஷ்டிக்க நேர்ந்தது.

சுதந்திர இந்தியாவில் மகாத்மா காந்தி மன நிம்மதியின்றி உண்ணுவிரதம் இருக்கும்படியான விபரீதமோ, இதர மாபெருந் தலைவர்கள் இடைவிடாது சஞ்சலப் படும்படியான சங்கடங்களோ ஏற்படுமென்று யாரும் கனவிலும் கருதியிருக்க மாட்டார்கள்.

ஆனல், பாரத நாடு சுதந்திரம் பெற்ற ஆறு மாதங்களுக்குள் காந்திஜி இரண்டு தடவை உண்ணுவிரதம் இருக்கும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டிருப்பதைக் கண்டு மனம் துடிக்காத மாநில மக்கள் இருக்க முடியாது,

விருச்சிகத்தையும் விஷப் பாம்பையும்கூடக் கொல்லுவது அஹிம்சா தர்மத்துக்கு மாருகும் என்று உபதேசிக்கும் உத்தமர், தமது கண்ணெதிரே தம் தேச ஜனங்கள் ஆயிரக்கணக்கில் ஒருவரை யொருவர் வெட்டிக் கொண்டு வீழ்வதையும், நிரபராதிகளான பெண்களும் சிசுக்களும் ஈவிரக்கமின்றிப் பலியாவதையும் எவ்வாறு சகித்துக்கொண்டிருக்க முடியும்?

சுதந்திரம் பெற்ற அடியோடு சென்ற வருஷம் ஆகஸ்டு மாதத்தில் கல்கத்தாவிலே மூண்ட வகுப்புக் கலகம் காரணமாகக் காந்திஜி உண்ணுவிரதம் இருக்க நேர்ந்ததும், அதன் பலனுக அங்கு கலகம் நின்று இன்றளவும் அமைதி நிலவி வருவதும் யாவரும் அறிந்ததே. கல்கத்தாவில் அமைதி ஏற்பட்டபின் மகாத்மா காந்தி, வகுப்பு வெறியின் ஆணி வேரை அறுப்பதற்காக பாகிஸ்தானுக்குப் புறப்பட்டதும், அங்கு செல்லும் வழியிலே டில்லியில் திடீரென்று வகுப்புக் கலகம் மூண்டதால் அங்கேயே தங்கிவிட்டதும் எல்லோருக்கும் தெரிந்ததுதான்.

* * *

அதிர்ஷ்டவசமாக, காந்திஜியின் செல்வாக்கினுலும் பண்டித ஜவாஹர்லால் நேரு சர்க்காரின் கண்டிப்பான முறைகளினுலும் டில்லி கலகம் இரண்டொரு நாட்களில் ஓய்ந்துவிட்டது.

டில்லியில் எவ்விதக் காரணமுமின்றி கலகம் ஏற்பட்டு விடவில்லை. பாகிஸ்தானைச் சேர்ந்த மேற்குப் பஞ்சாபத்திலிருந்து வந்த அகதிகளின் கஷ்டநஷ்டங்களை நேரில் கண்டவர்கள் ஆத்திரம் கொண்டதே மேற்படி விபரீதத்தில் முடிந்தது.

அங்கு கலகம் ஓய்ந்து விட்டபோதிலும் நிலைமை உள்ளூறப் புகைந்து கொண்டிருக்கிறதென்றும் எந்த நிமிஷத்திலும் துவேஷத் தீ குபீரென்று பற்றிக்கொள்ள ஏதுவாக இருக்கிறதென்றும் காந்திஜி கூறுகிருர்.

மற்றப் பிரதேசங்களுக்கு வழிகாட்டியாக இருக்க வேண்டிய தலை நகரத்திலே அத்தகைய நிலைமை நிலவிவருவதைக் குறித்து வருந்தியே, காந்திஜி சென்ற செவ்வாய்க்கிழமையிலிருந்து உண்ணுவிரதத்தை மேற்கொண்டுள்ளார். சுதந்திர இந்தியாவில் மகாத்மா காந்தி உண்ணுவிரதம் இருக்கும்படியான நிலைமை ஏற்பட்டிருப்பது பாரத நாட்டு ஜனங்களுக்கு ஒரு பெரும் இழுக்காகும்.

* * *

காந்திஜியின் உண்ணுவிரதமானது தலைவர்கள் ஜனங்கள் சகலரையும் நடுக்கிடும்படி செய்திருக்கிறது. இந்த வயதில் காந்திஜி கால வரையறையின்றி உண்ணுவிரதமிருக்கத் தீர்மானித்திருப்பதைக் குறித்து யார்தான் மனம் பதருமல் இருக்க முடியும்?

காந்திஜி தமது உண்ணுவிரதத்தை நிறுத்துவதற்குக் கடுமையான, எளிதில் நிறைவேற்ற முடியாத நிபந்தனை எதுவும் விதிக்கவில்லை.

"ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமைக்கும் அன்னியோன்னிய பாவத்துக்கும், இந்தியாவின் தலைநகரான டில்லி, தேசத்தின் மற்றப் பாகங்களுக்கு வழிகாட்டியாக இருந்தால் போதுமானது; நான் உண்ணுவிரதத்தை முடித்துவிடுகிறேன்" என்று தமது ஒப்பற்ற தலைவர் உறுதி கூறியிருக்கிருர்.

எனவே, காந்திஜி உண்ணுவிரதத்தை நிறுத்தும்படியான நிலைமையை உண்டுபண்ண வேண்டிய உடனடியான பொறுப்பு டில்லியிலுள்ள அதிகாரிகள், ஜனங்களின் தலையில் சுமந்திருக்கிறது.

டில்லியில் இந்திய சர்க்கார் அதிகாரிகள் பாரபட்சமற்ற முறையில் எல்லா வகுப்பினரின் நலன்களையும் பாதுகாத்து வருகிருர்கள் என்பதற்கு எத்தனையோ உதாரணங்கள் கூற முடியும். அங்கு நேர்ந்த கலகத்தில் பல முஸ்லிம்கள் தங்கள் வீடு வாசல்களை விட்டுச் செல்லும்படியான நிலைமை ஏற்பட்டது. அந்த முஸ்லிம்களையெல்லாம் திரும்பிவருமாறு இந்திய சர்க்கார் அதிகாரிகள் அழைத்திருக்கின்றனர். அதைத் தவிர, மேற்படி முஸ்லிம்களின் வீடுகளை ஆக்கிரமித்துக் கொள்ள இதர சமூகங்களைச் சேர்ந்த அகதிகள் செய்த முயற்சியையும் அதிகாரிகள் சமீபத்தில் தடுத்து விட்டார்கள்.

எனவே, நம் தலைவர்களான அதிகாரிகள் எத்தனையோ கஷ்டங்களுக் கிடையில் தங்களுடைய கடமைகளை வழுவின்றி நிறைவேற்றி வருகிறார்கள் என்பதில் சந்தேகமில்லை.

அந்த முயற்சியில் ஜனங்களும் ஹிருதய பூர்வமாக ஒத்துழைக்க முற்படுவார்களாயின், டில்லியில் புகைந்து கொண்டிருக்கும் துவேஷத் தீ அணையும்; உடனே மகாத்மா காந்தியின் உண்ணு விரதமும் முடிவு பெறும்.

• • •

சில மாதங்களுக்கு முன் வரையில் கல்கத்தா, முஸ்லீம் லீக்கர்களின் கோட்டையாக இருந்து வந்தது. வகுப்பு வெறியை அடிப்படையாகக் கொண்ட நேர்நடவடிக்கை பலி பீடத்துக்கு முதன் முதலாக இரையானவர்கள் கல்கத்தா வாசிகள் தான். அப்படியிருந்தும், இன்று கல்கத்தாவில் அமைதி நிலவவில்லையா? ஹிந்து-முஸ்லீம்களிடையே சகோதர பாவம் நிலவவில்லையா?

கல்கத்தா வெற்றி பெற்ற ஒரு காரியத்தில் டில்லி மாத்திரம் ஏன் தோல்வியுற வேண்டும்? தோல்வியுறாது.

• • •

மகாத்மா காந்தியின் உண்ணுவிரதத்தினால் பாரத தேசம் முழுதும் திகைத்துக் கலக்கமுற்றிருக்கும் இச்சமயத்தில், வங்காள கவர்னர் ராஜாஜி கூறியுள்ள பொன் மொழிகள் எல்லோருடைய கண்களையும் திறந்து வகுப்பு வெறி ஒழிவதற்குப் பெரிதும் உதவியாக இருக்குமென நம்புகிறோம்.

"இந்தியத் தாயின் புதல்வர், புதல்விகளின் மனதை ஆட்கொண்டு அல்லல் படுத்துவது பரஸ்பரமுள்ள பயமும் அவநம்பிக்கையும்தான். நம்பிக்கையின்மைதான் பயத்துக்குக் காரணம். ஒருவர்மீ தொருவர் கொள்ளும் தப்பெண்ணமே பெரிதும் அவநம்பிக்கைக்குக் காரணம். அந்த அவநம்பிக்கையைப் போக்க ஓர் அரிய வழி இருக்கிறது. ஹிருதய பூர்வமாகக் கடவுளைப் பிரார்த்தனை செய்வதே அந்த வழி. அதன் பலனாக அவநம்பிக்கை ஒழிந்து சுய நம்பிக்கை ஏற்படும்."

வகுப்பு வெறியர்கள் எந்தப் பிரதேசத்தைச் சேர்ந்தவர்களாயினும் எந்தச் சமூகத்தைச் சேர்ந்தவர்களாயினும், மேற்படி மணிவாசகங்கள் அத்தகையோருடைய மடமையை ஒழித்துக் கடமையை வற்புறுத்துமாக.

# பட்டினி என்னும் பகைவன்

*விவசாயி*

கவியரசர் பாரதியார் பட்டினியின் கொடுமையை எப்போதேனும் சில சமயமாவது உணர்ந்திருக்க வேண்டும். அந்த உணர்ச்சியின் மிகுதியிலேதான்,

"தனி ஒருவனுக்கு உணவில்லையெனில்
ஜகத்தினை அழித்திடுவோம்!"

என்று பாடினார் போலும்! உணவு கிடைக்காமல் பட்டினி கிடக்க நேர்ந்தால் யாருக்கும் இப்படிப்பட்ட கோபம் உண்டாகத்தான் செய்யும். பாரதியாரே சாவதானமாகவும் சாந்தமாகவும் இருந்த காலத்தில், அதே விஷயத்தைப் பற்றி,

"வயிற்றுக்குச் சோறிடவேண்டும் — இங்கு
வாழும் மனிதருக் கெல்லாம்"

என்று சொல்லி யிருக்கிறார். இந்த வரிகளின் தொனியில் கோபமில்லை, ஆவேசமில்லை; ஆயினும் விஷயத்தில் கொண்ட உறுதி ஒன்றுதான்.

பாரதியார் பாடிய இதே விஷயத்தைப் பற்றி இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் தமிழகத்தில் வாழ்ந்த தமிழ் மூதாட்டி பாடியிருக்கிறார்.

"வையகம் எல்லாம் வயலா, வானோர்
தெய்வமா முகடு சேரியாகக்
காணமும் முத்தும் மணியும் கலந்தோரு
கோடானுகோடி கொடுப்பினும்—ஒரு நாள்
ஒரு பொழுது ஒருவன் ஊண்ஒழிதல் பார்க்கும்
நேர்நிறை நில்லாது என்னும் என் மனனே
நேர்நிறை நில்லாது என்னும் என்மனனே!"

பூமியும் சொர்க்கமும் என் உடைமையானாலும் சரி, பொன்னும் முத்தும் மணியும் கலந்து கோடானு கோடி பணம் கொடுத்தாலும் சரி, ஒரு நாள் ஒரு பொழுது ஒருவன் உணவு கிடைக்காமல் பட்டினி கிடப்பதைப் பார்ப்பதனால் எனக்கு ஏற்படும் துன்பத்தைப் போக்க மேற்கூறிய சுகபோக செல்வங்களினால் ஆகாது!—இது ஔவை மூதாட்டியின் வாக்கு.

நமது சென்னை மாகாணத்து மந்திரிகள் இச்சமயம் அடிக்கடி சிந்தித்துப்பார்க்க வேண்டிய வாக்கு.

பாரதி பாடலையும் ஔவையின் மூதுரையையும் நம்மை ஆளும் மந்திரிகள் அடிக்கடி ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டிய அவசியம் இப்போது நேரிட்டிருக்கிறது.

* * *

இப்போதுள்ள சென்னை மந்திரி சபையை "இணையில்லாத மந்திரிசபை" என்று யாரும் சொல்லமாட்டார்கள். ஆயினும் இதற்கு முன்னாலிருந்த பிரகாசம் மந்திரி சபையைக் காட்டிலும் இது சிறந்தது என்பது பொதுமக்களின் கருத்து. இந்தக் கருத்து நீடித்திருக்கும்படி மந்திரிகள் காரியம் செய்ய வேண்டும். எல்லாவற்றிலும் முக்கியமாக மக்களின் உணவு விஷயத்தைக் கருதவேண்டும். மக்கள் பட்டினிகிடக்கும் நிலைமை ஏற்பட்டு விட்டால், அப்புறம் மந்திரிகள் வேறு துறைகளில் செய்திருக்கும் நல்ல காரியங்களை யாரும் பொருட்படுத்த மாட்டார்கள். "கோயில்களைத் திறந்து விட்டிருக்கிறோம்; பள்ளிக்கூடச் சுவர்களுக்குச் சுண்ணாம்பு அடித்திருக்கிறோம்; லஞ்சத்தையும் கொஞ்சம் ஒழித்திருக்கிறோம்" என்றெல்லாம் சொன்னால் மக்களின் காதில் ஏறாது. "எங்களைப் பட்டினி போடுகிறீர்களே, பாவிகளே!" என்றுதான் சாபம் கொடுப்பார்கள்.

ரேஷன் முறை ஒழிந்ததின் பயனாகச் சிற்சில கிராமாந்திரப் பிரதேசங்களில் இந்தகைய சாபம் ஏற்கெனவே ஒலிக்க ஆரம்பித்திருக்கிறது. இந்தச் சாப ஒலி பேரொலியாகி, பெரும் வெள்ளமாகித் திரண்டு வந்து எல்லாரையும் மூழ்க அடிப்பதற்குள்ளே மந்திரிகள் விழித்தெழுந்து சரியான காலத்தில் சரியான காரியங்களைச் செய்ய வேண்டும்.

* * *

ரேஷன் முறையை எடுத்தது சரிதான். அதனால் பல கேடுகள் ஏற்பட்டு வந்தன. வருஷம் நூறு கோடி ரூபாய் தேசம் நஷ்டமடைந்தது. "அன்னிய நாட்டிடம் காய்ச்சிகள்" என்று சொல்லப்படுவதற்கு உரியவர்களானோம். அடுத்த இரண்டு மாதத்தை எப்படி ஓட்டுவது என்ற கவலையே பெருங் கவலையா யிருந்தது. அந்த இரண்டு மாதம் போனால், அடுத்த இரண்டு மாதத்துக்குக் கவலைப் பட்டோம். "அமெரிக்காவே! அரிசி அனுப்பாயோ?"

"ஆஸ்திரேலியாவே! கோதுமை அனுப்புவாயோ?" என்று அலறினோம்.

ரேஷன் முறை ஏற்பட்டதினால் அதற்கெல்லாம் இனிமேல் இடமில்லை.

இந்தச் சென்னை மாகாணத்துக்கு வேண்டிய உணவை நாம் இந்த மாகாணத்திலேயே தயாரித்துக்கொள்ள வேண்டும் என்ற அவசியம் ஏற்பட்டுவிட்டது.

நம்மில் ஒருவனிடம் அதிகமாயிருந்தால் இன்னொருவனுக்கு வாங்கிக் கொடுக்கலாம். ஒரு ஜில்லாவில் குறைவாயிருந்தால் இன்னொரு ஜில்லாவிலிருந்து தருவித்துக் கொள்ளலாம். கிராமங்களிலிருந்து அதிகப்படி தானியத்தை நகரங்களுக்கு அனுப்பி வைக்கலாம். இந்த அளவிலே சர்க்கார் சட்டங்கள் இனியும் அவசியமாயிருக்கும்.

ஆனால், சட்டியில் இருந்தால் தானே அகப்பையில் வரும்? இம்மாகாணவாசிகள் அனைவருக்கும் வேண்டிய உணவுப் பொருள் உற்பத்தியானால்தானே மேற்படி நிரவல் வேலை எல்லாம் செய்யலாம்?

மொத்தத்தில் உணவு உற்பத்தி குறைவாயிருக்கும் வரையில் எத்தவித ஜால வித்தைகளினாலும் மக்களின் பட்டினியைத் தடுக்க முடியாது. சர்க்கார் சட்டங்களினாலும் முடியாது; சாகஸமான பேச்சுக்களினாலும் முடியாது; வாதங்கள், விதண்டாவாதங்கள், ஆவேச இயக்கங்கள், கட்சிப் போர்கள் முதலிய எதனாலும் மக்களின் பட்டினியைத் தவிர்க்க முடியாது.

இந்த 1948-ம் வருஷத்தில் சென்னை சர்க்காரும் சென்னைப் பொது மக்களும் சேர்ந்து உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு ஒரு மகத்தான பிரயத்தனம் செய்ய வேண்டும். இந்த ஒரு காரியத்திலேயே எல்லாரும் முழுக் கவனமும் செலுத்த வேண்டும்.

இந்த வருஷத்தில் எவனொருவன் ஒன்றும் விளையாதிருந்த பூமியில் ஒரு கோட்டை நெல்லையாவது, ஒரு மூட்டை ராகியையாவது உற்பத்தி செய்கிறானோ, அவனே உண்மையான தேசபக்தன்; அவன்தான் மக்களுக்கு உழைக்கும் உபகாரி; உணவு உற்பத்திக்கு ஏதாவது ஒரு வகையில் விரோதம் செய்பவன் மக்களை ஏமாற்றும் அபகாரி.

• • •

புதிய வருஷத்தில் பிரதம மந்திரி கனம் ராமசாமி ரெட்டியார் நல்ல முறையில் வேலை செய்யத் தொடங்கியிருக்கிறார். திருவள்ளூரில் இம்மாத ஆரம்பத்தில் விவசாயிகளின் மகாநாட்டில் கனம் ரெட்டியார் செய்த பிரசங்கம் மிக முக்கியமானது; உபயோகமானது- "கண்ட்ரோல்களைத் தளர்த்திவிட்டதனால் நம் தலையில் ஒரு பெரும் பொறுப்புச் சுமந்திருக்கிறது. இந்த மாகாணத்துக்கு வேண்டிய உணவுப் பொருளை நாம் உற்பத்தி செய்ய வேண்டும். இந்தக் காரியத்தில் விவசாயிகள் அனைவரும் ஒத்துழைக்க வேண்டும்" என்று பிரதம மந்திரி கேட்டுக் கொண்டிருக்கிறார். அத்துடன், "இந்தக் கடமையைச் செய்யத் தவறினோமானால், பெரும் விபத்துக்கு உள்ளாக நேரிடும்" என்றும் எச்சரிக்கை செய்திருக்கிறார். இதேமாதிரி உணவு மந்திரி டாக்டர் ராஜனும் சில கூட்டங்களில் பேசியிருக்கிறார்.

பிரதம மந்திரியும் உணவு மந்திரியும் காட்டும் வழியை மற்ற மந்திரிகளும் பின்பற்ற வேண்டும். மூன்று மாதத்துக்கு முன்பு உணவு நெருக்கடி நேர்ந்த போது மந்திரிகள் நாலாபுறமும் சுற்றுப் பிரயாணம் செய்ததில் நல்ல பலன் கிடைத்தது. அதைக் காட்டிலும் நெருக்கடியான நிலைமை இப்போது நேர்ந்திருக்கிறது. அப்போது விவசாயிகளின் கையில் கட்டுக் கடையாக இருந்த தானியத்தை வாங்க வேண்டியிருந்தது. இப்போதோ அதிகப்படியாக தானிய உற்பத்திக்கே வழி செய்தாக வேண்டும். மற்ற எல்லாக் காரியங்களையும் சில காலத்துக்கு ஒதுக்கி வைத்துவிட்டு ஒரு மாதம் எல்லா மந்திரிகளும் இதே வேலையில் ஈடுபட்டாலும் மிகையாகாது. ஒவ்வொரு ஜில்லா தலைநகருக்கும் சென்று ஜில்லா கலெக்டர் முதலிய உத்தியோகஸ்தர்களையும் ஜில்லாவின் முக்கியமான விவசாயிகளையும் அழைத்துப் பேசவேண்டும். ஆங்காங்குள்ள விவசாய இலாகா காரியாலயங்களுக்கும் சிப்பந்திகளுக்கும் புத்துயிர் அளித்து ஊக்க மூட்ட வேண்டும். பொது மக்களுக்கும் அவர்களுடைய கடமையை நினைவூட்டவேண்டும்.

மந்திரிகளின் பிரயாணச் செலவு பற்றிக் குறை கூறுகிறவர்கள் நாட்டின் நிலைமை அறியாதவர்கள்; அல்லது வெறும் விஷமிகள். மக்களுடைய பேச்சைப் பொருட்படுத்தக் கூடாது. மந்திரிகளுடைய பிரயாணச் செலவில் சிக்கனம் பிடிக்கும் காலம் இல்லை இது. சிக்கனத்தைக் கடைப் பிடிக்க வேறு துறைகள் இருக்கின்றன.

ஆனால் வெறுமனே பிரயாணம் செய்வதாலும் பேசுவதாலும் மட்டும் உணவு உற்பத்தி பெருகி விடுமா? பிரசாரம் அவசியம்; ஆனால் பிரசாரம் காரியத்துக்கு அடிப்படையாக அமைய வேண்டும்.

ஒவ்வொரு ஜில்லாவிலும் ஜில்லா கலெக்டரும், ஜில்லா விவசாய உத்தியோகஸ்தரும் பிரபல விவசாயிகளும் சேர்ந்து நானது வருஷத்தில் 100-க்கு 15 பங்கு வீதம் உணவு உற்பத்தியை அதிகமாக்குவதற்குத் திட்டம் போட வேண்டும். (100க்கு 15 பங்கு அதிகமாக்கத் திட்டம் போட்டால் 10 பங்காவது காரியத்தில் நிறைவேறும்.) போட்ட திட்டத்தை மாகாண சர்க்காருக்கு அனுப்ப வேண்டும். போட்ட திட்டத்தில் படிக்குப் பாதியாவது நிறைவேறுகிறதா என்று பார்த்துக் கொள்வது மாகாண சர்க்காரின் பொறுப்பு.

எந்த ஜில்லாவில் போட்ட திட்டப்படி காரியம் நிறைவேறுகிறதோ, அந்த ஜில்லாவில் ஒரு பெரிய திருவிழா நடத்தி, அந்த ஜில்லாவின் சர்க்கார் உத்தியோகஸ்தர்களையும் விவசாயிகளையும் பாராட்டிக் கௌரவிக்கவேண்டும்.

• • •

உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு இரண்டு வழிகள் இருக்கின்றன. ஏற்கெனவே பண்பட்டுத் தானியம் விளையும் நிலங்களில் இன்னும் அதிகமாக விளையும்படிச் செய்தல் முதல் வழி. தரிசாகக் கிடக்கும் நிலங்களைப் புதிதாகச் சாகுபடிக்குக் கொண்டு வருதல் இரண்டாவது வழி.

இந்த இரண்டு துறைகளிலும் சர்க்காரும், சர்க்கார் விவசாய இலாகாவும், விவசாயிகளுக்குச் செய்யக் கூடிய உதவிகள் எவ்வளவோ இருக்கின்றன. விவசாயிகளை "ஒத்துழையுங்கள்" என்று கேட்பது போல், விவசாயிகளுடன் சர்க்காரும் சர்க்கார் இலாகாக்களும்ஒத்துழைக்கவேண்டும்.

பண்பட்ட நிலங்களில் இப்போதைவிட அதிக தானிய உற்பத்தி செய்வதற்கு விவசாய இலாகா நிபுணர்கள் வழி காட்டலாம்; பிரசாரம் செய்யலாம்.

உதாரணமாக, பசுந் தழை உரத்தினால் நிலத்தின் வளமும் விளைவும் அதிகமாகிறதென்று இப்போது நன்றாய்த் தெரிய வந்திருக்கிறது. சணல், அவுரி, கரிப்பயறு, டெஞ்சா, ஸெஸ்பேனியா முதலிய செடிகள் நிலத்தின் வளத்தை அபரிமிதமாக விருத்தி செய்கின்றன. இந்தச் செடிகளின் விதைகளை விவசாய ஆபீஸ்களில் வைத்திருக்கிறார்கள். ஆனால், மாகாணத்திலுள்ள எல்லா விவசாயிகளும் தங்கள் நிலத்திற்கு மேற்படி பசுந் தழை உரத்தை உபயோகிக்கிறார்களா? இல்லை. இன்னும் முக்கால்வாசி விவசாயிகளுக்கு இந்த விஷயமே தெரியாது; தெரியும்படி சொல்லுவார் இல்லை. சொன்னாலும் போதாது; விதையைக் கொண்டுபோய் விதைத்து விட்டே வரவேண்டும்.

திருவள்ளூர் விவசாயிகளின் மகாநாட்டில், விவசாய இலாகா டிமான்ஸ்ட்ரேட்டர்களை ஆபீஸிலேயே இருப்பதற்குப் பதிலாக வெளியிலே பிரசாரம் செய்ய அனுப்பவேணுமென்று பிரதம மந்திரியிடம் கேட்டுக் கொண்டார்கள்.

இது சரியான கோரிக்கை. இதைப் பற்றி விசாரித்ததில் இப்போதெல்லாம் விவசாய இலாகா நிபுணர்கள் வெளியில் அதிகம் போகமுடியாமலிருப்பதற்கு ஒரு காரணம் ஏற்பட்டிருப்பதாகத் தெரிந்தது.

ஒவ்வொரு விவசாய ஆபீஸிலும் விவசாயக் கருவிகள், வேலிக்கு இரும்புக் கம்பிகள், தண்ணீர் இறைக்கும் பம்புகள், பலவகை என்ஜின்கள், தானிய விதைகள், பசுந்தழை விதைகள், பிண்ணாக்கு, இரசாயன உரம் முதலிய சாமான்கள் ஏராளமாக விற்பனைக்கு வருகின்றன. ஆயிரக் கணக்கான பெறுமானம் உள்ள சாமான்கள். இவற்றைக் கட்டிக் காக்கும் பொறுப்பு டெமான்ஸ்ட்ரேட்டர்களுக்கு ஏற்படுகிறது. குறைந்தாலும் காணாமற் போனாலும் டெமான்ஸ்ட்ரேட்டர்கள் கையை விட்டுச் சர்க்காருக்குப் பணம் கொடுக்க வேண்டியதாகும். ஆகவே அவர்கள் வெளியில் போகத் தயங்குகிறார்கள்.

இதற்கு ஒரு பரிகாரம் தேட வேண்டும். ஒவ்வொரு விவசாய ஆபீஸிலும் சாமான் விற்பனையைப் பொறுப்பாகக் கவனிக்கத் தனி குமாஸ்தாவும், வெளியில் சென்று பிரசாரம் செய்யத் தனிப் பிரசார உத்தியோகஸ்தரும் வேண்டும்.

விவசாயப் பிரசாரத்துக்கென்று விவசாய இலாகா ஒரு பத்திரிகை வெளியிடுகிறார்கள். ஒருவரும் படித்துத் தெரிந்து கொள்ள முடியாத நடையில் ஏதோ எழுதி இரகசியமாகச் சிலருக்கு அனுப்பிக் கொண்டிருக்கிறார்கள். தமிழில் வெளியாகும் தினப் பத்திரிகைகளை விவசாய

இலாகா ஏன் உபயோகப்படுத்திக் கொள்ளக்கூடாதென்று தெரியவில்லை.

விவசாய இலாகாவிலிருந்து வாரத்துக்கு ஓர் அறிக்கை எல்லாப் பத்திரிகைகளுக்கும் ஏன் அனுப்பிவைக்கக் கூடாது?

உதாரணமாக, ஒரு வாரத்துக்கு முன்பு இம் மாகாணத்தின் சில இடங்களில் ஒரு அங்குலம் மழை பெய்தது. இந்த மழையை விவசாயிகள் எந்த மாதிரி உபயோகித்துக் கொள்ளலாம், என்ன உணவுப் பொருளின் விதை விதைக்கலாம் என்று விவசாய இலாகா ஏன் ஓர் அறிக்கை விடக்கூடாது?

* * *

**ப**ழைய நிலங்களை மேலும் வளப்படுத்துவதைக் காட்டிலும் தரிசு நிலங்களைப் புதிதாக உணவு சாகுபடிக்குக் கொண்டுவருவது மிகவும் பிரயாசையான காரியம்.

புதிய சாகுபடிக்கு இன்றியமையாதது நீர்ப்பாசனம். நதியில் அணை கட்டும் பெரிய பாசனத் திட்டங்கள் பல வருஷங்களில் நடக்க வேண்டியவை. இப்போது ஏற்பட்டிருக்கும் அவசர நெருக்கடிக்கு மேற்படி பெரிய திட்டங்களை நம்பிப் பயனில்லை.

கிணறுகள், ஏற்றங்கள், பம்புகள் இவற்றைக் கொண்டுதான் இப்போதைக்குப் புது நிலங்களை வளப்படுத்த வேண்டும்.

“பாதிக் கிணற்றுக்குப் பணந்தருகிறோம்!” “சொற்ப வட்டிக்குக் கடன் தருகிறோம்!” என்பவை போன்ற திட்டங்கள் கவைக்கு உதவாதவை.

உடனடியாக உணவுப் பொருளைப் பெருக்க வேண்டுமானால், சர்க்கார் முழுதும் தாங்களே செலவு செய்து மாகாணமெங்கும் ஆயிரக்கணக்கான கிணறுகள் கட்டிக் கொடுக்க வேண்டும். கட்டிய கிணற்றை உணவுப் பொருள் உற்பத்திக்கு உபயோகிப்பதாக விவசாயியிடம் நிபந்தனை பெறலாம்; அப்படி உபயோகிக்காதவர்களுடைய கிணற்றையும் நிலத்தையும் சேர்த்துப் பறிமுதல் செய்து விடலாம்.

ஆனால் பாதிக் கிணறு வெட்டுகிற திட்டம் பிரயோஜனப்படாது. சொற்ப நிலமுடைய விவசாயிகளிடம் பாக்கிப் பாதிக் கிணறு வெட்டப் பணம் இருப்பதில்லை. பண வசதியுள்ள பெரிய மிராசுதார்களோ சர்க்காருடைய நில உரிமைக் கொள்கை நிச்சயமாகாதபடியால் மேலும் நிலத்தில் பணத்தைச் செலவழிக்க விரும்புவதில்லை.

பழைய கிணறுகளிலிருந்தும் புதிய கிணறுகளிலிருந்தும் தண்ணீர் இறைப்பதற்கு வேண்டிய வசதிகளையும் சர்க்கார் செய்து கொடுக்க வேண்டும். அந்த வசதிகள் காலாகாலத்தில் சரியான சமயத்தில் கிடைக்கச் செய்ய வேண்டும்.

* * *

**ந**மது விவசாய மந்திரி ஸ்ரீ கே. மாதவமேனன் அவர்கள் விவசாயத்தில் எவ்வளவு அநுபவம் உள்ளவர் என்று நமக்குத் தெரியாது. அநுபவம் இல்லாவிட்டாலும் ஊக்கமும் உற்சாகமும் இருக்கின்றனவா என்பதும் நமக்குத் தெரியாது.

ஊக்கமும் உற்சாகமும் அநுபவமும் ஸ்ரீ கே. மாதவமேனனுக்குப் பூரணமாக இருந்தபோதிலும், இந்த வருஷத்தில் உத்தேச திட்டம் நிறைவேற வேண்டுமானால், அவர் ஒருவரை மட்டும் நம்பிப் பிரயோஜனமில்லை. மந்திரிகள் எல்லாரும் இரண்டு வாரகாலம் தானியக் கொள்முதலில் ஈடுபட்டிருந்தது போல், இந்த வருஷம் முழுதும் தானிய உற்பத்தியைப் பெருக்குவதில் ஈடுபடவேண்டும் என்று வற்புறுத்துகிறோம். அல்லது மந்திரி சபைக்குள்ளே விவசாய ஊக்கமுள்ள மந்திரிகள் அடங்கிய ஒரு சின்னக் கமிட்டியையாவது ஏற்படுத்திக் கொள்ளவேண்டும்.

இப்படி மந்திரிகளும், மக்களும், சர்க்கார் உத்தியோகஸ்தர்களுமாகச் சேர்ந்து ஒத்துழைத்து ஒரு பெரும் பிரயத்தனம் செய்தாலன்றி நாட்டு மக்களைப் பட்டினியிலிருந்தும் பஞ்சத்திலிருந்தும் காப்பாற்ற முடியாது. மந்திரி சபை பெரிய அபகீர்த்தியிலிருந்து தப்பவும் முடியாது.

தள்ளிப்போடக் கூடிய காரியம் அல்ல; அலட்சியம் செய்யக்கூடிய நெருக்கடியல்ல; நிலைமை சமாளிக்க முடியாமற் போனபிறகு விழித்தெழுந்து சுறுசுறுப்புக் கொள்வதால் ஒரு பயனும் விளையாது.

## மதுரைத் திருநாள்

இரண்டாவது கட்டுரையும் படங்களும்

அடுத்த இதழில் வெளியாகும்

அட்டைப்பட விளக்கம்

# வரதக்ஷிணையில் பாதி

நமது தேசத்திலுள்ள பல தொல்லைகளையும் பற்றிப் பேசி வரும்போது, "எல்லாத் தொல்லைகளுக்கும் ஒரே மருந்துதான்; ஜனப் பெருக்கத்தைக் குறைப்பது ஒன்றுதான் வழி!" என்று யாராவது ஒருவர் சொல்லுவார். பிறகு சிலகாலம் வரையில் எல்லாரும் அதைப்பற்றிப் பேசிக் கொண்டும் பத்திரிகையில் எழுதிக் கொண்டும் கடுமையாக விவாதம் செய்துகொண்டும் இருப்பார்கள். சில நாளைக் கெல்லாம் பேச்சும் எழுத்தும் விவாதமும் அடங்கும். அடுத்த வருஷத்தில் வழக்கம்போல் இந்தியாவில் ஐம்பது லட்சம் ஜனத்தொகை அதிகமாகி யிருக்கும்!

பொதுவாக, ஜனத் தொகையைக் குறைக்க முடியாமற் போனாலும் பெண் குழந்தைகளின் தொகையையாவது குறைப்பதற்கு ஏதேனும் வழியில்லையா என்று விஞ்ஞானிகள் கண்டுபிடித்துச் சொன்னால் நல்லது. அப்படிப் பெண்களின் தொகை குறைந்து போனால், பிள்ளைகள் மாப்பிள்ளைகள் ஆவதற்கு, "வரதட்சிணை கொண்டு வா!" என்று கேட்கமாட்டார்கள் அல்லவா? அதற்குப் பதிலாக, பெண் வீட்டுக்குப் பண முடிப்புடன் சென்று பெண்ணின் தந்தைக்குப் பாத காணிக்கை செலுத்திப் பெண்ணை மணம் செய்து கொடுக்கும்படி கேட்கமாட்டார்களா?

இந்த வரதட்சிணை என்னும் பெருந்தீமையைப் பற்றி இருபது வருஷங்களுக்கு முன்னால் அதிகமாகப் பேசியும் எழுதியும் வந்தார்கள். சிலர், "சுயராஜ்யம் கிடக்கட்டும், ஸார்! முதலில் இந்த வரதட்சிணையை ஒழிப்பதற்கு உங்கள் மகாத்மாவை ஓர் இயக்கம் ஆரம்பிக்கச் சொல்லுங்கள். எடுத்ததற் கெல்லாம் உங்கள் மகாத்மா உண்ணாவிரதம் இருக்கிறாரே? வரதட்சிணைக்காக ஒரு தடவை உண்ணாவிரதம் இருக்கக் கூடாதோ?" என்று கூடச் சொல்வதுண்டு. கொஞ்சகாலமாக வரதட்சிணைத் தீமையைப் பற்றிய பேச்சு அதிகமாய்க் காதில் விழாமல் இருந்தது. ஒரு வேளை நாட்டைப் பிடித்திருந்த பல பீடைகளைப்போல் அதுவும் தொலைந்து போய் விட்டதோ என்று எண்ணிக் கொண்டிருந்தேன். "இல்லை; வரதட்சிணைக் கொடுமை இன்னும் இருக்கத்தான் இருக்கிறது. அதுவும் பிரம்மாண்ட உருவம் கொண்டு சமூகத்தையே அழித்து விடப் பார்க்கிறது!" என்பதைச் சில வாரங்களுக்கு முன்னால் நான் பார்த்த ஒரு நாடகத்தின் மூலமாக அறிந்தேன்.

நாடகம், திருவல்லிக்கேணி தேசிய உயர்தரப் பாடசாலை மாணவிகளால் நடிக்கப்பட்டது. மேற்படி பள்ளிக்கூடம் இப்போது நடக்கும் கட்டிடத்தில் நடந்தது. 'கட்டிடம்' என்றால், கட்டிப் போட்டு வைக்கும் இடம் என்று பொருள் செய்து கொள்ளலாம். நாடகம் நடக்க ஒரு மணி நேரத்துக்குள், "அப்பாடா! நாடகம் எப்போது முடியும்? வெளியில் எப்போது புறப்படலாம்?" என்று ஆகிவிட்டது. "ஐயோ, பாவம்! ஒருமணி நேரம் உட்கார்ந்திருக்க நமக்கு இவ்வளவு கஷ்டமாயிருக்கிறதே! ஆயிரம் பெண் குழந்தைகள் இந்தக் கட்டிடத்துக்குள் உட்கார்ந்து தினம் ஆறு மணி நேரம் எப்படித்தான் கஷ்டப்படுகிறார்களோ?" என்று அடிக்கடி தோன்றிக்கொண்டிருந்தது. திருவல்லிக்கேணியில் வசிக்கும் பெண் குழந்தைகளின் பெற்றோர்கள் இருக்கிறார்களே, அவர்கள் எவ்வளவு கல் நெஞ்சர்களாயிருக்கவேண்டும்?...ஆனால் அப்படியும் சொல்வதற்கில்லை. திருவல்லிக்கேணியில் இப்போது ஏற்பட்டிருக்கும் வீடு நெருக்கடியை எண்ணும்போது, பெற்றோர்கள் மனமிரங்கி, "சற்றுநேரம் பெண் குழந்தைகள் பள்ளிக்கூடத்திலாவது ஹாய்யாக உட்கார்ந்து காற்று வாங்கி விட்டு வரட்டுமே!" என்னும் எண்ணத்தினால் அனுப்பி வைக்கிறார்களோ, என்னமோ!

ஆனால் நான் எதற்காக அந்த இடநெருக்கடியில் ஒரு மணி நேரமும் உட்கார்ந்திருந்தேன் என்றால், முதலாவது, வெளியேறுவதற்கு வகை யில்லாதபடி பெண் குழந்தைகள் வழியை அடைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். இரண்டாவது, நாடகமும் நன்றாயிருந்தது. இந்தப் பள்ளிக்கூடத்தின் தமிழ் ஆசிரியர் குழந்தைகள் நடிப்பதற்கென்றே எழுதிய நாடகம் என்று அறிந்தேன். வேறு எந்த ஆசிரியர் எப்படி

இருந்தாலும், முதல்தரமான தமிழ் ஆசிரியரை அமர்த்தியிருக்கிறார்கள் என்று நிர்மானித்தேன். நாடகப்போக்கும் சம்பாஷணைகளும் அவ்வளவு இயற்கையாகவும் ரஸமாகவும் அமைக்கப்பட்டிருந்தன.




அதற்கென்ன? நாடகம் எழுதிவிடலாம்; ஆனால் நடிப்பு? எவ்வளவு நல்ல நாடகமாயிருந்தாலும் நடிப்பைப் பொறுத்தல்லவா அது சோபிக்கும்? நடித்த பெண் குழந்தைகள் தங்களுடைய தமிழ் ஆசிரியருக்குப் பிரமாதமான நல்ல பெயர் வாங்கிக் கொடுத்து விட்டார்கள். விஷயம் அவர்களுக்கு உரியதாயிருந்தபடியாலே நடிப்பு உணர்ச்சி பொருந்தியதாயிருந்தது. பேச்சோ, சொல்ல வேண்டியதில்லை. பளிச் சென்று சிலரும், வெடுக் கென்று சிலரும் தீர்த்துக் கட்டி விட்டார்கள். இம்மாதிரி நாடகங்கள் சிலவற்றில் மாப்பிள்ளைப் பையன் முதலில் வரதட்சிணை வேண்டாம் என்று சொல்லி, பெற்றோர்களின் கட்டாயத்துக்காக வரதட்சிணைக்குச் சம்மதிப்பதாகக் கதையை அமைத்திருப்பார்கள். இந்த நாடகத்தில் அப்படியில்லை. மாப்பிள்ளைப் பையனே "வரதட்சிணை வாங்கித்தான் ஆக வேண்டும்!" என்று கட்சி பேசினான். நல்ல சாமர்த்தியத்துடனும் விவாதத் திறமையுடனும் பேசினான். (ஒருவேளை, ஸ்டூடெண்ட்ஸ் காங்கிரஸ் காரியதரிசி வேலை பார்த்திருப்பான் போலும்!) பிள்ளையின் தகப்பனுக்குப் பெண்ணைப் பெற்ற மனிதரின் பேரில் கொஞ்சம் தாட்சண்யம். ஆனால் அவருடைய தாயார் (அதாவது மாப்பிள்ளையின் பாட்டி) பேரனுடைய கட்சியில் பலமாக நின்று வாதமிட்டாள். பாட்டி என்றால், அப்படியல்லவா இருக்க வேண்டும்? பலே பாட்டி! (பாட்டியாக நடித்ததும் ஒரு சிறு பெண் குழந்தைதான்!)

நாடகம் பொதுவாக ரொம்ப பேஷாயிருந்தது. தமிழ் நாட்டில் நாடகக் கலையைச் சிறந்த முறையில் வளர்த்து வரும் நவாப் ராஜமாணிக்கம் முதலிய கலைஞர்கள் பார்த்து மகிழக் கூடியதாயிருந்தது.

நாடகத்தின் இறுதியில் என்னைப் பேசச் சொன்னார்கள். நாடகம் பார்த்த உணர்ச்சி மிகுதியினால் நான் சொன்னதாவது:—

"வரதட்சிணையைக் கட்டாயம் ஒழித்து விட வேண்டும். சர்க்கார் இதற்காகச் சட்டம் செய்ய வேண்டும். வரதட்சிணை வாங்குகிற பிள்ளைகளையும் பிள்ளைகளின் பெற்றோர்களையும் கடுமையாகத் தண்டிக்கவேண்டும். அவர்களுக்கு ஏழு வருஷம் கடுங்காவல் விதிக்க வேண்டும். இல்லாவிடில் தீவாந்திரத்துக்கு அனுப்ப வேண்டும். இப்படியெல்லாம் செய்ய முடியாவிட்டால், வாங்குகிற வரதக்ஷிணையில் சரிபாதியை என். கே. திருமலாச்சாரிக்கு அனுப்பும்படியாவது சட்டம் செய்யவேண்டும்!"

இவ்விதமாக அன்று நான் வெளியிட்ட அபிப்பிராயத்தைக் கொஞ்சம் இப்போது மாற்றிக் கொண்டிருக்கிறேன். அதாவது வரதட்சிணையில் சரி பாதியை ஸ்ரீ திருமலாச்சாரிக்கு அனுப்புவதற்குப் பதிலாக முக்காற்பங்கு அனுப்பும்படி சட்டம் செய்தால் நல்லது என்று கருதுகிறேன்.

ஏனெனில், நாடகம் பார்த்த பிறகு ஸ்ரீ என். கே. திருமலாச்சாரியார் அவர்களின் பரிதாபமான முகத்தைச் சில தடவை நான் பார்த்தாகி விட்டது. ஒவ்வொரு தடவையும் பள்ளிக்கூடத்தில் இடநெருக்கடி அதிகமாகி வருகிறதென்பதை அவருடைய பரிதாபமான முகம் சொல்லி வருகிறது.

ஸ்ரீ என். கே. திருமலாச்சாரியாரின் முகம் சொல்வானேன்? அதோ நமது புகைப்பட நிபுணர் எடுத்திருக்கும் படங்கள் சொல்கின்றனவே! அட்டைப் படத்தைப் பாருங்கள். பள்ளிக்கூட மணி செருங்கியதும் அந்தக் குறுகிய ஒற்றை வாசல் வழியாக எவ்வளவு நெருக்கியடித்துக் கொண்டு பெண் குழந்தைகள் பள்ளிக்கூடத்துக்குள் பிரவேசிக்கிறார்கள்? இவ்வளவு பேரும் அந்தக் கட்டிடத்துக்குள்ளே குகைபோன்ற அறைகளில் மணிக்கணக்காக உட்கார்ந்திருக்க வேண்டுமே? அதோடு படிக்கவும் வேண்டுமே? அதோடு பாடவும் ஆடவும் நாடகம் போடவும் கற்றுக் கொள்ள வேண்டுமே?

பெருமானே! பார்த்தசாரதி! சற்றே கண் திறந்து இந்தக் குழந்தைகளின் மீது கருணை செய்யமாட்டாயா?—இப்படியாக ஸ்ரீ என். கே. திருமலாச்சாரி நெடுங்காலம் பிரார்த்தனை செய்ததின் பலனாக......

"அது யார் ஐயா, அந்தத் திருமலாச்சாரி? அடிக்கு அடி, வரிக்கு வரி, வந்து பிராணனை வாங்குகிறார்?" என்று நேயர்கள் கேட்பது காதில் விழுகிறது.

சொல்லுகிறேன்; அடுத்தாற்போல் வரும் மூன்று பக்கப் படங்களிலே கடைசிப் படத்தைப் பாருங்கள். அதில் இடுப்பிலே கையை வைத்துக் கொண்டு ரொம்பக் குஷியாக நிற்பதுபோலப் பாசாங்கு செய்கிறாரே, அவர்தான்! திருவல்லிக்கேணி தேசியப் பெண் பாடசாலையின் காரியதரிசியும் அவர்தான். இன்னொரு மனுஷரா யிருந்தால், இந்தப் பெண் பாடசாலையைப் பற்றிய கவலையினாலே இதற்குள் தலையிலே கை வைத்துக் கொண்டிருப்பார்! "ஏண்டா அப்பா, பேசாமல் நமது வக்கீல் வேலையைப் பார்த்துக் கொண்டிராமல் இந்தப் பொது வேலையை மேற்கொண்டோம்?" என்று ஏங்கிப் போயிருப்பார். 'மெய் வருத்தம் பாரார் பசி நோக்கார் கண் துஞ்சார் ...... கருமமே கண்ணாயினார்' கோஷ்டியைச் சேர்ந்தவர் ஸ்ரீ என். கே. திருமலாச்சாரியார். ஆகவே, பெரும் பிரயத்தனம் செய்து ஸ்ரீ பார்த்தசாரதி ஸ்வாமியின் கல் மனதையும் கரைத்துக் கோயிலுக்குச் சொந்தமான பூமியில் பள்ளிக்கூடத்துக்கு வேண்டிய விஸ்தாரமான பகுதியை நூறு வருஷக் குத்தகைக்கு எடுத்து விட்டார்.

சாமியின் கல் மனதையாவது கரைத்து விடலாம்; சர்க்காரின் இரும்பு மனதைக் கரைக்க முடிகிறதா? முடியாதபடியால், கட்டடச் செலவில் நாலில் ஒரு பங்கு தான் தரமுடியும் என்று சர்க்கார் சொல்லி விட்டார்கள். நேற்று வரையில் பாதிச் செலவு கொடுத்து வந்ததைப் பண நெருக்கடியை முன்னிட்டு நாலில் ஒரு பங்கு தான் என்று ஆக்கிவிட்டார்கள். பாவம்! அவர்கள் கஷ்டம் அவர்களுக்கு! மது விலக்கு ஒரு பக்கம்; உணவுப் பஞ்சம் ஒரு பக்கம்; எம். எல். ஏ.க்கள் ஒரு பக்கம்; என். ஜி. ஓ.க்கள் ஒரு பக்கம்; உபாத்தியாயர்கள் ஒரு பக்கம்; எல்லாப் பக்கங்களிலும் அவர்களுக்குத் தொல்லை!

ஆம்; சர்க்காரின் கஷ்டம் சர்க்காருக்கு! திருமலாச்சாரியின் கஷ்டம் திருமலாச்சாரிக்கு! கட்டடம் கட்டுவதற்கு இன்னும் வேண்டியிருக்கும் பெருந் தொகைக்கு எங்கே போவது, யாரைப் பிடிப்பது என்று அங்கு மிங்கும் பார்த்துக் கொண்டிருக்கிறார். அவரிடம் நீங்கள் சிக்கிக்கொள்ளப் போகிறீர்கள், ஜாக்கிரதை! சிக்கிக் கொண்டால், நீங்கள் அதிர்ஷ்டக்காரர்கள் தான்! உங்களுடைய பணத்திலே கொஞ்சம் மிகச் சிறந்த தர்ம காரியம் ஒன்றுக்குப் போய்ச் சேரும்.

1940-ம் வருஷம் வரையில் சாமாராவ் ஸ்கூல் என்ற பெயருடன் ஆரம்பப் பள்ளிக்கூடமா யிருந்த ஸ்தாபனம் பிரிவு பட்டு, 1941-ல் பெண் குழந்தைகளுக்குத் தனிப் பள்ளிக்கூடம் ஏற்பட்டது. 1942-ல் 97 பெண் குழந்தைகள் படித்தார்கள். இந்த வருஷத்தில் தொள்ளாயிரத்துச் சொச்சம் குழந்தைகள் படிக்கிறார்கள். ஐந்து வருஷத்திற்குள் ஒரு பள்ளிக்கூடம் இவ்வளவு அபிவிருத்தியடைந்த தென்பது மிக ஆச்சரியமான விஷயம். எல்லாம் டாக்டர் திரிமூர்த்தி அவர்களும் ஸ்ரீ திருமலாச்சாரி அவர்களும் பள்ளிக்கூடத்தின் பொறுப்பை ஏற்றுக் கொண்ட வேளையின் மகிமை!

தமிழன்பராகிய டாக்டர் டி. எஸ். திரிமூர்த்தி அவர்கள்தான் மேற்படி பள்ளிக்கூடத்தை நடத்தும் தேசியக் கல்விச் சங்கத்தின் தலைவர்.

இரண்டு பேருக்கும் பகலெல்லாம் பள்ளிக்கூடம் பற்றிய நினைவு; இரவெல்லாம் பள்ளிக்கூடம் பற்றிய கனவு. எனக்கோ, கொஞ்சகாலமாக இந்த இருவரையும் பற்றிய நினைவும் கனவுந்தான். இந்த நல்ல மனிதர்கள் இவ்வளவு சிரத்தையுடன் பெண் குலத்துக்குச் செய்து வரும் கல்வித் தொண்டு பூர்த்தி யடைய வேண்டுமென்று இறைவனைப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன்!

ஜனவரி 24உ முதல் பிப்ரவரி 1உக்கு இடையில் ஐந்து தினங்கள் மேற்படி கட்டட நிதிக்காக விக்டோரியா பப்ளிக் ஹாலில் நடனங்களும், நாடகங்களும் நடத்தப்போவதாக அறிகிறேன். அவற்றில் 'பிரதக்ஷிணை' என்னும் வரதட்சணை நாடகமும் ஒன்றாகும். நாடகங்களுக்குக் கூட்டம் கூட்டமாகச் சென்று சபையில் இட நெருக்கடியை உண்டுபண்ணும்படி சென்னை நேயர்களை வேண்டுகிறேன். இதன்மூலம் பள்ளிக்கூடத்தில் பெண் குழந்தைகளின் இட நெருக்கடியைக் குறைப்பதற்கு அவர்கள் உதவி செய்ததாகும். கல்வியறிவிற் சிறந்த அறிவாளிகள் வாழும் திருவல்லிக்கேணியில் பெண் குழந்தைகள் வசதியாக உட்கார்ந்து படிப்பதற்கு ஒரு நல்ல பள்ளிக்கூடமும் அதற்கு ஒரு நல்ல கட்டடமும் இருக்க வேண்டாமா? —ஜ. கி.





திருவல்லிக்கேணி (நேஷனல் ஹைஸ்கூல்) பெண்கள் உயர்தர பாடசாலையில் ஏறக்குறைய ஆயிரம் பெண் குழந்தைகள் படிக்கிறார்கள். புத்தகப் படிப்போடு கூட, பெண்களுக்கு வாழ்க்கையில் பயன்படும் தையல் வேலை, சமையல் வேலை ஆகியவையும் கற்பிக்கப் படுகின்றன.

மேலே: க்ஷேத்திர கணித வகுப்பு நடக்கிறது.

கீழே: "உட்காருவதற்கு இன்னும் கொஞ்சம் விசாலமான க்ஷேத்திரம் தரமாட்டாயா, பகவானே!" என்று பெண்கள் பிரார்த்தனை செய்கிறார்கள். ஆனால் நிற்பதற்குக் கூட நெருக்கடியாகத்தான் காணப்படுகிறது.





ஆயிரம் பெண்களுக்குக்
கண்ணைத் திறந்து விடும்
புண்ணியத்தைக் கட்டிக்
கொண்டும் உபாத்தி
யாயினிமார், உபாத்தி
யாயர்கள், நிர்வாகிகள்
ஆகியோரைமேலேகொண
வும். சாம சாம! இவர்
கள் உட்காருவதற்கே
இடம் போதவில்லையே!

*

ஸ்ரீ பார்த்தசாரதியின்
அருளிலும் பெரிய
விசாலமான இடம்
கிடைத்திருக்கிறது.
விசாலமான இடத்தில்
விஸ்தாரமான கட்டிடம்
கட்டித் தரும் புண்ணி
யத்தை எந்தப் பாக்கிய
சாலிகள் கட்டிக்கொள்
ளப் போகிறார்களோ?



# வளரும் தமிழ்

### புதுமைப் பதிப்பகம், காரைக்குடி.

தமிழ் நாட்டில் புது முறையில் புதுமை நூல்களை வெளியிடத் தொடங்கிய ஸ்தாபனங்களில் புதுமைப் பதிப்பகம் முதன்மையானது. ராஜாஜி மலர்த் தொகுதியில் "கட்டுரைகள்" என்னும் இரண்டாவது தொகுதி முதலில் 1943-ம் ஆண்டில் வெளியாயிற்று. இப்போது அதன் இரண்டாம் பதிப்பு வெளியாகி யிருக்கிறது.

உபநிஷதங்களையும், திருக்குறளையும், கீதையையும், காந்தி மகானின் சுய சரிதத்தையும் படிக்கும்போது நமக்கு உண்டாகும் தெய்விகமான தூய உணர்ச்சி இக் கட்டுரைகளில் பலவற்றைப் படிக்கும்போது உண்டாகிறது. இவை, மானிட வர்க்கத்தையே உயர்த்தக் கூடிய சிரந்தர இலக்கியத்தைச் சேர்ந்தவை. "சின்ன விஷயங்கள்" என்னும் பெயர் கொண்ட கட்டுரை பின்வருமாறு தொடங்குகிறது:—

"வாழை மரம் ஒன்றைப் பாருங்கள். அதன் வடிவம் வேர் முதல் நுனி வரையில் எவ்வளவு அமைப்பாக அமைந்திருக்கிறது! அகன்ற பச்சை இலைகள், தளதளவென்று உயிரொளியோடு மின்னும் தண்டு மரம். நுனியில் பாதி மூடியும் பாதி திறந்ததுமாக எட்டிப் பார்த்துக் கொண்டிருக்கிற புதிய குருத்து. அடியில் பட்டுப்போல், அழகாய்ப் பழுப்பேறின பட்டை. 'என் வேலை முடிந்தது. வளரும் செடியின் வளர்ச்சிக்குக் காப்பாகக் கீழே கிடக்கிறேன், தடையாக நிற்க மாட்டேன்' என்று வாய் திறந்து பேசுவதுபோல் இருக்கிறது. உயிர் படைத்த ஒரு ஜனசமூகத்தின் பண்பாட்டுக்கு வாழை மரம் எவ்வளவு பொருத்தமான உபமானம்!

குப்பையன் வீட்டுப் புழக்கடையில் அவன் தகப்பனார் வைத்த வாழை மரம் ஒன்று இருக்கிறது. மேலே விட்ட இலையெல்லாம் அறுபட்டு, மரம் மொட்டையாய்க் கம்பம்போல் நிற்கிறது. கீழே சாக்கடை நீர். அதில் அழுகிக் கிடக்கும் பட்டைகள். செடிக்கு ஜலம் தானாகச் சாக்கடையில் வந்தால் உண்டு. உலர்ந்து கிடந்தாலும் கேட்பார் இல்லை. இந்தப் பரிதாபமான நிலையிலும் குருத்துவிடப் பார்க்கிறது: எவ்வளவு கொடுமைக்கு இடையிலும் வளரப் பார்க்கிறது! வளராமற் போனால் செத்தல்லவோ போக வேண்டும்? இது நம் பண்பாட்டின் தற்போதைய நிலை என்று சொன்னால் குற்றமில்லை. குப்பையன் வீட்டு வாழை மரத்தில் இன்னும் உயிர் இருக்கிறது. காமதேனு அல்லவா? கொஞ்சம் கவலை செலுத்திக் கவனித்தால், எல்லாம் தரும். இதுவரையில் அதற்குச் செய்த கொடுமையையும் மறந்து குருத்துவிட்டு அழகாக வளரும்!"

ஆகா! 'சின்ன விஷயம்' என்றா இதைச் சொல்வது? உபநிஷதங்களும் கீதையும் வெளியிடுவது போன்ற அரும் பெரும் உண்மைத் தத்துவம் அல்லவா?

பக்கம் 311; விலை ரூ. 5—0—0.

★

இந்தியா தேசத்தில் தற்சமயம் உள்ள கதை ஆசிரியர்களில் வெளி நாடுகளில் புகழ் பெற்றவர் ஸ்ரீ முல்க்ராஜ் ஆனந்த். இவருடைய பல சிறு கதைகள் ஆங்கில நாட்டுப் பத்திரிகைகளில் வெளியாகி யிருக்கின்றன; ஆங்கிலேயரால் பாராட்டப் பட்டும் வருகின்றன.

சிறு கதைகளைத் தவிரப் பல பெருங் கதைகளும் ஸ்ரீ முல்க்ராஜ் எழுதியிருக்கிறார். அவற்றுள் "தீண்டாதான்" என்னும் கதையைப் புதுமைப் பதிப்பகத்தார் மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கிறார்கள். அயல் நாடுகளில் புகழ் பெற்ற இந்திய ஆசிரியர் ஒருவரின் நூலைத் தமிழர்களும் அறிந்து கொள்ளும்படி வெளியிட்டது பாராட்டுதற்குரியது. இதைப் படிப்பதின் பயனாகத் தமிழ் நாட்டுக் கதை ஆசிரியர்கள் பலர் முன்னைக் காட்டிலும் அதிக தன்னம்பிக்கை பெற்று மேலும் மேலும் நல்ல கதைகளை எழுதுவார்கள்.

ஸ்ரீ முல்க்ராஜ் பெரும்பாலும் இந்தியரின் வாழ்க்கையை மேனாட்டாருக்கு விளக்கும்

நோக்கத்துடனேயே எழுதுகிறார். இதைப் படித்துப் பாருங்கள்.

“ இந்தியாவில் சந்தியாகாலம் குறுகிய காலமுள்ளது ; நீண்ட நேரம் இருக்காது. சட்டென்று அது மறைந்ததும், இடத்துக்கும் காலத்துக்கும் மத்தியிலே ஏற்பட்ட மாறுதலைப் போலவே, அதே நேர அளவில் திடீரெனத் தோன்றி அவன் உள்ளத்திலும் ஓர் உணர்ச்சி பரவி, இருந்த சக்தி யனைத்தையும் ஒன்று கூட்டி, அவனுக்கு ஒரு ஸ்திரமான முடிவுண்டாக்கியது.”

என்ன? ஏதாவது விளங்குகிறதா? இன்னொரு தடவை படித்தால் கொஞ்சம் விளங்கலாம். ஆங்கிலேயருக் கென்று ஒரு வட இந்தியர் எழுதியதைத் தமிழ்ப் படுத்தி விளங்கச் செய்வது சிறிது கஷ்டமான காரியமே. மொழி பெயர்ப்பாளர் கூடிய வரையில் தெளிவாக்க முயன்றிருக்கிறார்.

பக்கம் 208 ; விலை ரூ. 3—12—0.

## வரவேற்கிறோம்!

கோயமுத்தூர் ‘காலச் சக்கர’த்தையும், சென்னை ‘அசோகா’வையும் மகிழ்ச்சியுடன் வரவேற்கிறோம். இரண்டு பத்திரிகைகளும் பொங்கல் புதுநாளில் தோன்றியிருக்கின்றன. வாரப் பத்திரிகையான ‘காலச் சக்கரம்’ தமிழ்நாட்டின் இரண்டு சிறந்த எழுத்தாளர்—தேசபக்தர்களை ஆசிரியராகக் கொண்டது. ஒருவர் ஸ்ரீ கே. எஸ். பெரியசாமி ; இன்னொருவர் ஸ்ரீ பெரியசாமித் தூரன். இருவரும் தேசத் தொண்டையே வாழ்க்கைப் பணியாகக் கொண்டவர்கள். கிராமங்களில் வாழும் பெரும்பாலான மக்களின் சுகதுக்கங்களையும் மனோபாவங்களையும் நன்கறிந்தவர்கள். முதல் இதழில் வெளியாகியிருக்கும் கட்டுரைகள், சுதந்திரம் அடைந்த தேசத்தில் மக்கள் முன்னேற்றம் அடைந்து நல்வாழ்வு நடத்தும் முறைகளைப் பற்றி எளிய தமிழ் நடையில் எடுத்துக் கூறுகின்றன. இதுபோன்ற உயர்ந்த இலட்சியங்களையுடைய பத்திரிகைகள் தமிழ்நாட்டுக்கு இச்சமயம் இன்றியமையாதவை. நாட்டின் நலத்தில் கவலையுள்ளவர்கள் ‘காலச்சக்கர’த்தை ஆர்வத்துடன் வரவேற்பார்கள்.

‘அசோகா’ (மாதப் பத்திரிகை) அரசியல், கலை, இலக்கியம் ஆகிய துறைகளில் தொண்டு செய்யும் நோக்கம் கொண்டது. இந்திய சுதந்திர சர்க்கார் தங்கள் முத்திரையாகக் கைக்கொண்டிருக்கும் அசோகச் சின்னம் ‘அசோகா’வின் முகப்பில் அழகாகப் பொலிகின்றது. உள்ளே பிரித்துப் பார்க்கும் பக்கம் எல்லாம் படங்கள் கண்ணைக் கவர்கின்றன. ரஸமான கதைகளும் கட்டுரைகளும் நிறைந்திருக்கின்றன. சீதை ‘அசோக’ வனத்தில் இருக்கும்போது அநுமார், தேவியைக் கண்டுபிடித்து நல்ல செய்தி சொல்லி அவளுடைய சோகத்தைப் போக்கினார். பதிலுக்குச் ‘சிரஞ்சீவி’ வரம் பெற்றார். தாய்நாட்டின் சோகம் தீர்ந்த ஆண்டில் தோன்றியிருக்கும் ‘அசோகா’ என்னும் பத்திரிகையும் சிரஞ்சீவியாக விளங்கட்டும்.

## * * * * * * * “யார் அது?” * * * * * * *

ஒரு சமயம் விக்டோரியா மகாராணியின் கணவரான ஆல்பர்ட் தம் அறையில் அமர்ந்து மும்முரமாகப் படிப்பதில் ஈடுபட்டிருந்தார். படிக்கும்போது தொந்தரவில்லாமலிருக்கும் பொருட்டு அறையின் கதவை உட்பக்கம் தாளிட்டிருந்தார்.

அப்பொழுது விக்டோரியா ராணி அறைக் கதவின் அருகே வந்து கதவைத் தட்டினார். கதவு திறக்கப் படவில்லை. ராணி மீண்டும் பலமாகக் கதவைத் தட்டினார். உள்ளே படிப்பில் ஆழ்ந்திருந்த ஆல்பர்ட் கதவைத் திறவாமலே “யார் அது?” என்று கேட்டார்.

விக்டோரியா ராணி மிகவும் மிடுக்கான குரலில், “இந்தியா தேசத்தின் சக்கரவர்த்தினி” என்றார். சில விநாடிகள் சென்றன. கதவு திறக்கப்பட வில்லை.



உள்ளேயிருந்து பதிலுமில்லை. ராணி கோபத்துடன் மீண்டும் கதவைத் தட்டினார். முன்போலவே ஆல்பர்ட் “யார் அது?” என்று கேட்டார்.

உடனே ராணி அழுத்தமான குரலில், “இங்கிலாந்தின் அரசி!” என்று கூறினார்.

பழையபடி மௌனம் நிலவியது. கதவும் திறக்கப்படவில்லை.

மறுபடியும் ராணி கதவைத் தட்டினார். ஆல்பர்ட் கதவைத் திறவாமலே, “யார் அது?” என்று மறுபடியும் கேட்டார்.

“நான்தான்; உமது அருமை மனைவி விக்டோரியா!” என்றார் மகாராணி.

இப்பொழுது ஆல்பர்ட்டின் குரல் நெகிழ்ந்தது. கதவும் உடனே திறந்துகொண்டது!

* * * * * * * * * * * * * * * * * * * * * * *

# குறை தீர்ந்தது

சிவகாமு



நான் வேண்டுமென்று அந்த அறைக்குப் போகவில்லை. அந்த அறையில் லலியினுடைய சீர வரிசைகளை மாமி தன் சிநேகிதிகளுக்கு எடுத்துக் காட்டிக் கொண்டு இருக்கிறாள் என்று தெரிந்திருந்தால், நான் அந்தத் திக்கையே கண்ணெடுத்தும் பார்த்திருக்க மாட்டேன். நானென்னவோ நிஷ்களங்கமாக, சகஜமாகப் போனதற்கு மாமி அப்படி முகத்தை விகாரப்படுத்திக் கொண்டு, "பாரு, உனக்கு என்ன வேலை இப்பொழுது? உன்னை யார் இங்கே கூப்பிட்டா? போ, கீழே!" என்று அதட்டி இருக்க வேண்டாம்; லலியும் முகவாய்க் கட்டையைத் தோள் பட்டையில் இடித்துக் கொண்டு, "தரித்திரம், பொறாமைப் பிசாசு!" என்று அற்பத்தனமாக வார்த்தைகளைக் கொட்டி இருக்க வேண்டாம்.

எனக்கு என்ன, அப்படி என் நிலைமை தெரியாமல் போய்விட்டதா? அல்லது, நான் என்னுடைய ஏழ்மை நிலையை மறந்து போகும்படி மாமி என்னை அவ்வளவு சீரும் சிறப்புமாக வைத்துக் கொண்டு பாராட்டுகிறாளா? பொழுது விடிந்தால் பொழுது போவதற்குள் எங்கள் தரித்திர நிலைமை, நாங்கள் நாதி யில்லாமல் தவித்தது, அந்த 'மகராஜியின் புண்ணியத்தாலே' நாங்கள் மானமாக வாழ்வது யாவற்றையும் எப்படி எப்படி யெல்லாம் சொல்லி இடித்துக் காட்ட வேண்டுமோ, அப்படி அப்படி யெல்லாம் சொல்லி இடித்துக் காட்டுகிறாளே, இந்த அழகுக்கு எனக்குப் பொறாமை என்ன, கர்வம் என்ன வேண்டிக் கிடக்கு?

தன் கணவர் இறந்தபிறகு—குடும்பத்தை அவர் நிர்க்கதியாகத் தவிக்க விட்டுவிட்டுச் சென்ற பிறகு — தன்னுடைய ஒரே அருமைக் குழந்தையுடன் கொடுக்கவோ வாங்கிக் கொள்ளவோ சகல விதத்திலும் உரிமையுள்ள என் தாயார் தன் தமையனிடத்தில் அடைக்கலம் புகுந்தது ஒரு தப்பா? அவளுடைய சாதத்தைச் சம்பந்தா சம்பந்தம் இல்லாத எத்தனையோ பேர் சாப்பிட்டு விட்டுப் போகும் பொழுது, சொந்தத் தங்கையும்—பெண்களுக்கும் சொத்தில் சம உரிமையுண்டு என்று சட்டமிட்டிருந்தால் பாதி ஆஸ்தியை ஆண்டு அனுபவிக்க வேண்டியவளுமான என் தாயாரும் அவளுடைய குழந்தையும் சாப்பிடுவதற்குப் பாத்தியம் இல்லையா?

இவ்வளவுக்கும் என்னுடைய தாயார் உட்கார்ந்து கொண்டு, நாத்தனார் ஸ்தானத்தில் 'மன்னி'யை அதிகாரமும் அமுலும் செய்து கொண்டு சாப்பிடவில்லை. சமையல்காரிக்குச் சமையல்காரியாய், வீட்டுத் துணைக்கும் துணையாக இருந்து மாடாக உழைத்துச் சாப்பிடும் பொழுதே நிஷ்டூரம்!

மாமா, பாவம்! அவர் என்ன செய்வார்? குரங்கின் கைப் பூமாலை போல அவளிடம்



அகப்பட்டுக் கொண்டு தவியாய்த் தவிக்கிறார்! எங்கள் இருவருடைய கண்களும் கலங்கக் கூடாது என்று அந்தரங்கத்தில் அவருக்குத்தான் எவ்வளவு ஆசை! அவருக்கு லலி வேறு, நான் வேறு இல்லை. ஆனாலும் அந்த அன்பைப் பகிரங்கமாக, மாமிக்கு முன்னால் காட்ட அவருக்குத் தைரியம் இல்லை!

உம், இந்த நீச நினைவுகள் என் இப்பொழுது வந்து என் அறிவைச் சுழலிட வேண்டும்? இதோ ஆகிவிட்டது; பொழுது விடிந்தால் என்னை அழைத்துப் போக, அந்த ஜீவன் வரப்போகிறது! அத்துடன் என் அத்தியாயம் மாமியின் வீட்டில் முடிந்து விடுகிறது.

## 2

எனக்கும் லலிக்கும் ஒரே பந்தலில் தான் கலியாணம் நடக்கப் போகிறது. கலியாணப் பத்திரிகையில் லலியினுடைய பெயர் மட்டும்தான் போட்டிருக்கிறார்கள். என்னுடைய பெயரை என் கணவருடைய பெயருடன் இணைத்துப் போட என் மாமிக்கு இஷ்டமில்லை. நான் லலியுடன் உட்கார்ந்து சாதம் சாப்பிட்டாலே ஏதோ என் கௌரவம் உயர்ந்து விடுவது போலவும், அந்தச் 'சின்ன எஜமானி'யின் அந்தஸ்து தாழ்ந்து விடுவது போலவும் நினைப்பவள், பத்திரிகையில் தன் பெண்ணுடன் என் பெயரையும் போட ஒருப்படுவாளா, என்ன?

அது மட்டுமல்ல; எனக்கு வரிக்கப் பட்ட பிள்ளையாண்டான் ஒரு ஏழைப் பையன்; ஒரு கம்பெனியில் ஐம்பதோ, அறுபதோ சம்பாதிக்கிறானாம்; இதை வைத்துக் கொண்டுதான் எல்லாச் செலவுகளும் செய்துகொள்ள வேண்டும்; வேறு நிலமோ நீச்சோ கிடையாது.

ஆனால் லலிக்கு வரப்போகிறவன் பரம்பரைப் பெரிய இடத்துப் பிள்ளை; ஆஸ்தியிலும் அந்தஸ்திலும் நிறைந்த இடம்; பையனும் எம். ஏ. பட்டம் வாங்கியிருக்கிறான்; உத்தியோகம் என்று போனால் அறுநூறு, எழுநூறு என்று எடுத்த எடுப்பிலேயே வாங்குவதற்குச் சிபார்சுகள் இருக்கின்றனவாம்.

இதெல்லாம் பெரிய வித்தியாசங்களாக எனக்குத் தோன்றவில்லை. நானும் லலியும், பித்தளையும் தங்கமும் போல! அப்படியிருக்கும்போது நாங்கள் ஒன்றாகி விடுவோமா, என்ன?

என் தாயாரோ, நானோ எனக்கு நிச்சயித்திருக்கும் வரனை முன்பின் பார்த்தது

கிடையாது, என்னையும் 'பிள்ளையாண்டான்' வந்து பார்க்கவில்லை. அந்த முழுப் பொறுப்பையும் என் மாமாவே ஏற்றுக் கொண்டு நிச்சயம் செய்திருந்தார். லலியை மட்டும் பிள்ளையாண்டான் நேரில் வந்து பார்த்தான். அவன் வந்த அன்று வீடு பட்ட அமளி கொஞ்ச நஞ்சமல்ல. டிபனுக்கும் சமையலுக்கும் நிமிஷத்திற்கு நிமிஷம் என் தாயாருக்குத் தாக்கீது வந்த மயமாக இருந்தது. லலிக்கு 'டிரஸ்' செய்து விட அக்கம்பக்கத்து வீட்டு ஸ்திரீகள் ஆறேழு பேர் வந்திருந்தார்கள். அவளுக்கென்ன அழகில் குறைவா, அந்தஸ்தில் குறைவா? வந்த பையன் ஐந்தே நிமிஷத்தில் தன் சம்மதத்தைத் தெரிவித்து விட்டான். முகூர்த்தத்திற்குத் தேதியும் குறித்து விட்டார்கள்.

3

அன்று இரவு. ஏதோ அகஸ்மாத்தாக மாடிக்குப் போனபொழுது மாமாவும், மாமியும் அறையில் பேசிக் கொள்ளும் சத்தம் கேட்டது. இறங்கிப் போய்விட வேண்டுமென்று திரும்பினேன். ஆனாலும் அவர்கள் பேசுவது என்னைப் பற்றியதாக இருக்கவே, தரித்து நின்று கேட்டேன்.

"அவனுடைய பெயரையும் போட்டால் என்ன, பத்திரிகையில் இடமா இல்லே?"

இது என் மாமா கேட்ட கேள்வி.

"இந்தாருங்கோ, இந்தமாதிரியெல்லாம் சொல்வதாக இருந்தால் அந்தப் பாஞ்சாலிக்கு முதலில் கலியாணமாகட்டும், பிறகு நம்ம லலிக்குச் செய்து கொள்ளலாம். இது என்ன, இதில் கூடவா போட்டா போட்டி?"

"ஒரே பந்தலில் எப்படியம்மா வித்தியாசமாகச் செய்கிறது?"

"அதற்காக? உங்க மாப்பிள்ளைக்குச் செய்யப்போகிற சீர் செனத்தி மாதிரியே அவனுக்கும் செய்யப் போறேளா?"

"சீர் வேண்டாம், செனத்தி வேண்டாம்! சேர்த்தாப்போல ஒரு மாதிரி 'டிரஸ்' வாங்குவதிலே என்னடி குடி முழுகிவிடப் போகிறது?"

"இந்த ஆட்டமெல்லாம் ஆடாதேயுங்கோ! நம்ம சம்பந்தி கௌரவம் என்ன, ஏதோ ஒரு கம்பெனியிலே நாலு காசு சம்பாதிக்கும் அவனுடைய கௌரவம் என்ன? எல்லாம் ஒன்றாயிடுமா? அப்புறம் சம்பந்தி வீட்டுக்காரா ஏதாவது வித்தியாசமா நினைத்துக் கொண்டு சண்டைக்குக் கிளம்பப் போகிறார்கள்! இப்பவே சொல்லி விட்டேன்!" என்று கடுமையாக எச்சரிக்கை செய்தாள்.

இதைக் கேட்ட என் மனம் எப்படித் துடித்திருக்கும்? இருந்தாலும் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல் நான் கீழே இறங்கி வந்து விட்டேன்.

என் மாமி எச்சரித்தபடிதான் சீர் வரிசைகள் இருந்தன. வெள்ளிப் பாத்திரங்கள், பித்தளைப் பாத்திரங்கள் அடுக்கடுக்காக லலிக்கு எடுத்திருந்தார்கள். வெள்ளிக் குடத்திலிருந்து, வெள்ளிச் சோப்புப் பெட்டி வரையில் ஒரு பாத்திரம் பாக்கி இல்லை. பித்தளைப் பாத்திரங்களும் அப்படித்தான். பத்துப் பேருக்குச் சமையல் ஸெட்டு, இருபது பேருக்குச் சமையல் ஸெட்டு என்று ஸெட்டு ஸெட்டாக எடுத்திருந்தார்கள். மாப்பிள்ளைக்குப் பத்தாறு பட்டு, எல்லா வேஷ்டிகளும் சரிகை போட்ட வேஷ்டிகள்; விரலுக்கு வைர மோதிரம், கைக்கு ரிஸ்ட் வாச்; ஜானவாசத்தின் போது அணிந்து கொள்ள மாப்பிள்ளைக்கு 'ட்வீடி'லேயே ஸூட்; தையல் கூலி மட்டும் அறுபது ரூபாயாம்!

ஆனால் எனக்கு......! எண்ணி விட்டால் நாலைந்து சாமான்கள்; வெள்ளிக் கூஜாவோ தட்டோ கிடையாது; வெள்ளிப் பஞ்சபாத்திரம் உத்தரணி மட்டும் எடுத்திருந்தார்கள். எங்களவருக்கு ஒரே ஒரு வெண்பட்டு; மற்ற வேஷ்டிகள் எல்லாம் மில் வேஷ்டிகள். மாப்பிள்ளை அழைப்புக்குச் சாதாரண துணியில் ஒரு ஷர்ட் மாத்திரம்தான் தைத்து வைத்திருந்தார்கள். பி. அண்டு ஸி. மில் துணியில் ஒரு 'கோட்' தைக்கக்கூடவா பணமும், பரிவும் இல்லை?

இந்த அகண்டமான வித்தியாசத்தைப் பற்றி நினைக்கும்பொழுதுதான் என் மாமாவின் தூய மனதை மாமி எவ்வளவு தூரம் மாற்றி, அந்த மனத்தில் தன் அதிகாரத்தைச் செலுத்தியிருக்கிறாள் என்று தெரிகிறது! இதை நான் பெரிதாகவே நினைக்க மாட்டேன். ஆனால், ஏழையான என்னைக் குத்திக் காட்ட இந்தச் சேவைகளின் பேதத்தை நாலு பேருக்கு ஏன் எடுத்துச் சொல்லவேண்டும்?

முந்தா நாள் இரவு படுத்துக் கொள்ளும் பொழுது என் தாயாரிடத்தில் இந்த வித்தியாசத்தைச் சொல்லி, "அம்மா, ஒரே பந்தலில் 'அவ'ரை அவமானப்படுத்து

அதுபோல இவ்வளவு வித்தியாசமாக வரிசைகள் இருந்தால் அவருக்குக் கோபம் வந்து......'' என்று ஆரம்பித்தேன்.

உண்மையில் சொல்லுகிறேன்; இந்த வித்தியாசம் அவருடைய மனதை என்ன பாடு படுத்துமோ? அதன் விளைவு எப்படி எந்தத் திக்கில் மாறுமோ என்றபயம் என்னை வெருவாகப் பிடித்துக் கொண்டிருந்தது.

அம்மா சாவதானமாக, "இதற்கெல்லாம் சிறு பெண்ணுன நீ மூள் வாதே! பெரியவா ஆசீர்வாதத்தில் அப்படியெல்லாம் ஒன்றும் நேராது; நீ கவலைப்படாமல் தூங்கு, அம்மா!'' என்று என்னைச் சமாதானப்படுத்தினுள்.

அம்மா தூங்கு என்று சொல்லிவிட்டாள்; தூக்கம் வந்தால்தானே? எந்த மூலையிலிருந்து எந்தச் சொல் கிளம்பி அவருக்குக் கோபம் மூட்டிவிடுமோ? அதனுல் அவர் கோபித்துக் கொண்டு போய்விடுவாரோ? அப்புறம் என்னுடைய நிலைமை......?

இன்னும் இந்த மாமிபீடத்தில் எனக்காக என் தாய் என்ன பாடு படவேண்டுமோ? எத்தனை வசை மொழி வாங்க வேண்டுமோ......?

கண்களை இறுக மூடிக் கொண்டால் பார்த்த இருள்தானே? அம்மாதிரியே எனக்குக் கலியாணம் ஆகப் போவது கூட உண்மைதானு, அல்லது ஒரு கனவா என்று அந்த இருட்டில் என் மனம் குழம்பிக் கொண்டிருந்தது.

4

பொழுது விடிந்தது. ஆனுல் நேரம் தான் எவ்வளவு மெதுவாக ஊர்ந்து செல்லுகிறது!

இதோ பேசிக் கொள்ளுகிருர்களே, அவரும் அவரைச் சார்ந்த நாலைந்து பேரும் வந்திருக்கிருர்களாம். அம்மா என்னவோ தைரியமாகத்தான் இருக்கிருள். எனக்கு மட்டும் ஏன் இந்த நெஞ்சு 'பட பட' வென்று அடித்துக் கொள்ளுகிறது?

ஆம், அவரைத்தான் வேண்டிக் கொள்ளுகிறேன். சாலைவிநாயகரே! ஒரு விக்கினமும் இல்லாமல் என் கழுத்தில் ஒரு முடிபோட அனுக்கிரகம் செய்யப்பா! சிதர்த் தேங்காய் உடைக்கிறேன்!

எதற்குத்தான் இந்த ஜனங்கள் எடுத்ததற்கெல்லாம் இப்படி 'திடு திடு' என்று ஓடிவர வேண்டுமோ, தெரியவில்லை.

எனக்கா, என்ன சமாசாரம் கொண்டு வருகிறார்களோ—'பாருவின் புருஷன் கோபித்துக் கொண்டுபோய் விட்டான்'—என்பது போன்ற வார்த்தை கிளம்பப் போகிறதோ என்று ஒரே பயமாயிருக்கிறது!

ஜானவாஸம் தெருக்கோடிக்கு வந்துவிட்டது! மாமி என்னையும் லலிதையையும் கூடத்தைச் சேர்ந்த உக்கிராண அறைக்குள் உட்கார வைத்து விட்டாள்.

வீட்டின் வாசலுக்கு வந்து விட்டது கூட்டம். சகல வாத்தியங்களும் முழக்கின. 'வலது பாதம் முதல்லே, வலது பாதம் முதல்லே, வலது பாதம் முதல்லே!' என்று சாஸ்திரிகளும் பெரியவர்களுமாக எச்சரிக்கை செய்ய, மாப்பிள்ளைகள் உள்ளே வந்து கூடத்தில் உட்கார்ந்தார்கள்.

எங்கும் ஒரே கூச்சலும் கொம்மாளமுமாக இருந்தது. 'ஸத்து, ஸத்து ......' என்று சாஸ்திரிகள் கத்தினர்.

"அப்பு, மௌனத்தை கிறத்தச் சொல்லுடா!" என்றார் ஒரு பெரியவர்.

மௌனம் நின்றது; ஆனாலும் பெண்கள் கூட்டத்திலிருந்து வந்த கூச்சல் நிற்கவில்லை.

"தயவு செய்து கொஞ்ச நேரம், நிச்சய தார்த்தம் வரையில் யாரும் இரையக் கூடாது; ஆரம்பிக்கலாமா?" என்று சாஸ்திரிகள் மாமாவைக் கேட்டுவிட்டு, விநாயக பூஜையை ஆரம்பித்தார்.

இந்தச் சமயத்தில் அவ்வளவு அமைதியையும் கிழித்துக் கொண்டு, கூட்டத்திலிருந்த ஏழு வயதுடைய ஒரு பெண் குழந்தை தன் தாயாரிடத்தில், "அம்மா, பாருவின் ஆம்படையான்தான் அம்மா அழகாயிருக்கான்!" என்றாள்.

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் பெண்கள் கூட்டத்தில் ஒரு கலகலப்பு ஏற்பட்டு ஓய்ந்தது. எனக்குப் பொறி தட்டிவிட்டது. தெய்வ அசரீரியா அது? இல்லை, என் மனக்குறை தீர்க்க வந்த அமுதமொழியா? அல்லது லலி, அவளுடைய தாயார் இருவருடைய கர்வத்தையும் பங்கப்படுத்த முனைந்த கூர் அம்பா?

அதே சமயத்தில் என் அருகிலிருந்த லலிதையை நான் கவனித்தேன். அவள் உதட்டைக் கடித்துக் கொண்டிருக்க, அவளுடைய தாயார் அந்தப் பெண் குழந்தையைத் தன் இரு விழிகளாலும் சுட்டு விடுவதுபோல விழித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். சாஸ்திரிகள் மந்திரத்தை ஓதிக் கொண்டிருந்தார். நான் 'மைநிறைந்த பொன்னை விடக் கண் நிறைந்த கணவனே மேல்' என்ற திருப்தியுடன், அழகில் சிறந்த என் கணவரின் கரத்தை அன்புடன் பற்றினேன்.



## ராஜாஜி ஜெயந்தி

தஞ்சை நகரில், ஸௌராஷ்டிர தேசிய வாலிபர் சங்கத்தின் சார்பிலும், இன்னும் பல சங்கங்களின் சார்பிலும், நாளது ஜனவரி 5வ. ராஜாஜியின் எழுபதாவது ஜெயந்தியைப் பெரிய திருவிழாவாகக் கொண்டாடினார்கள். ராஜாஜி அவர்களின் திரு உருவப் படம் அழகிய வேலைப்பாடமைந்த புஷ்ப விமானத்தில் காட்சியளித்தது. விமானத்தின்மீது பூச்சக்கரக் குடை ஒன்று மின்சார சக்தியினால் சுற்றிக் கொண்டேயிருந்தது கண் கொள்ளாக் காட்சியாயிருந்தது. ஸ்ரீமதி ரகுராஜ பாரதி தேசியக் கொடியை ஏற்றி வைத்த பிறகு, ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளை எம். எல். ஏ. தமது தலைமைப் பிரசங்கத்தை நிகழ்த்தினார். தலைவர் ராஜாஜியின் திரு உருவப் படத்தைத் திறந்துவைத்து, ஸ்ரீ நாடிமுத்துப் பிள்ளை அருமையான சொற்பொழிவாற்றினார். தஞ்சை ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ சீனிவாச ஐயரும், மற்றும் பலரும் ராஜாஜியின் தியாக வாழ்க்கையைப் பற்றிப் பேசினார்கள்.

இந்தத் திருவிழா இவ்வளவு கோலாகலமாக நடந்தேறுவதற்குப் பெரிதும் காரணமாயிருந்த தஞ்சை தேசபக்தர் ஸ்ரீ எஸ். வி. கிருஷ்ணசாமி பாகவதரின் வந்தனோபசாரத்துடன் ஜனன விழா வைபவம் இனிது முடிந்தது.

. . . .

எதிர்ப் பக்கத்தில் உள்ள படத்தில், தஞ்சையில் ராஜாஜி ஜெயந்தியைக் கொண்டாடுவதற்கு உற்சாகத்துடன் ஒத்துழைத்த இளைஞர்களையும், ராஜாஜியின் படத்தைத் திறந்து வைத்து ஸ்ரீ நாடிமுத்துப் பிள்ளை பேசுவதையும், விழாவுக்குத் தலைமை வகித்த ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளை பிரசங்கமாரி பொழிவதையும் காணலாம்.




சீனு

ராஜகுமாரி குமுதம் தோட்டத்தின் ஒரு மூலையில் தன்னந்தனியாக அழுத வண்ணம் உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு ஒரு பெரிய குறை. குமுதத்திற்கு மற்றெல்லா சம்பத்துகளையும் அளித்திருந்த ஈசுவரன், அழகையும் முக வசீகரத்தையும் மட்டும் அவளுக்குக் கொடுக்கவில்லை.

வழக்கம்போல அன்றும் குமுதம் தன்னுடைய நிலைமையைக் குறித்து எண்ணி வருந்தியவாறே தோட்டத்தில் உட்கார்ந்திருந்த பொழுது, ஓர் அதிசயம் நிகழ்ந்தது. தன்னை யாரோ பின்னாலிருந்து தொட்டதை யுணர்ந்து திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். நாலா பக்கத்திலும் காந்தியைப் பரப்பியவாறு, அதிசயிக்கத் தக்க அழகை யுடைய ஒரு தேவதை அங்கு நின்று கொண்டிருந்தது.

குமுதம் ஆச்சரியத்தால் கண்களை அகல விழித்தாள். "நீ யார்? இங்கு எங்கே வந்தாய்?" என்ற வார்த்தைகள் அவள் வாயிலிருந்து தாமாக வெளி வந்தன.



தேவதை புன் சிரிப்புடன் அவளருகில் வந்தமர்ந்து, "குழந்தாய், என்னைச் சௌந்தர்ய தேவதை என்று அழைப்பார்கள்; நீ ஏன் அழுகிறாய்? சொல்; என்னாலான உதவியைச் செய்கிறேன்" என்றது.

"பக்கத்துத் தேசத்து ராஜகுமாரனிடம் என் உள்ளத்தைப் பறிகொடுத்துவிட்டேன். ஆனால் அழகில்லாத என்னை எந்த ராஜகுமாரன் தான் கைப்பிடிக்க முன் வருவான்?" என்று கண்களிலிருந்து நீர் பெருகக் குமுதம் கூறியதைக் கேட்டு, தேவதையின் உள்ளம் நெகிழ்ந்தது. சிறிது நேரம் அந்தத் தேவதை அவளுக்கு ஆறுதல் கூறிக் கொண்டிருந்துவிட்டு, கட்டாயம் அவளுக்கு உதவி செய்வதாக வாக்களித்து விட்டு மறைந்தது.

குமுதம் மறுநாள் தோட்டத்திற்குச் சென்றாள். சற்று நேரத்திற்கெல்லாம் அவளை நோக்கி ஓர் அழகிய மான், ஒரு சுந்தர புருஷன் பின் தொடர ஓடி வந்தது. மான் அவளை நெருங்கியதும் அதைப் பின் தொடர்ந்து வந்த இளைஞனைக் கண்டு ராஜகுமாரி வெட்கித் தலை குனிந்தாள். அது வேறு யாருமில்லை; அவள் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட பக்கத்துத் தேசத்து ராஜகுமாரன் சுகுமாரன்தான்!

அப்பொழுது நிகழ்ந்த மற்றொரு அதிசயம் அவ்விருவரையும் திகைக்க வைத்தது. ஒருவரை யொருவர் நோக்கி விழித்தவாறே நின்று கொண்டிருக்கையில், அவ்விருவருக்குமிடையே நின்ற மான் திடீரென்று மறைந்தது. விஷயம் புரியாமல் இருவரும் திண்டாடியபொழுது, அவர்கள் முன் தேவதை தோன்றியது.

ஆம்; எல்லாம் தேவதையின் வேலைதான்! காட்டில் வேட்டையாடிக் கொண்டிருந்த சுகுமாரனைத் தோட்டத்திற்கு இழுத்து வரும் பொருட்டு தேவதை செய்த யுக்திதான் அது!

விஷயம் புரியாமல், குமுதத்தையும் தேவதையையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டு நின்ற சுகுமாரனை நோக்கி "இந்த ராஜகுமாரியை மணந்து கொள்ள உனக்

குச் சம்மதந்தானா?" என்று தேவதை கேட்டது.

சுகுமாரன் 'பூர்ண சம்மதம்' என்பதற்கு அறிகுறியாகத் தன் தலையை அசைத்தான். குமுதம் அசந்து போய் விட்டாள்!



ஏற்கனவே கலவரமடைந்திருந்த குமுதத்திற்குத் தன் காதுகளை நம்ப முடியவில்லை. "இது என்ன, எல்லாம் மாயமாகவல்லவா இருக்கிறது! சுகுமாரன் எப்படித் தன்னை மணக்கச் சம்மதித்தான்? தேவதை ஒருக்கால் தன்னை ஓர் அழகிய பெண்ணாக மாற்றி விட்டதோ?" என்று எண்ணி அவள் தவித்துக் கொண்டிருக்கையிலேயே, தேவதை அவர்களிருவருடைய கைகளையும் சேர்த்துப் பிடித்துக் கொண்டு, "சரி, இனி நான் விடை பெற்றுக் கொள்ளலாமல்லவா?" என்று கேட்டவாறு குமுதத்தை நோக்கிச் சிரித்தது.



குமுதத்திற்கு ஏற்பட்ட மகிழ்ச்சியில் என்ன பேசுவதென்றே புரியவில்லை. அவளிடம் தன் மணப் பரிசாக உறையிலிட்ட ஒரு கண்ணாடியைக் கொடுத்து, கொஞ்ச காலம் அதை வெளியே எடுக்கக் கூடாது என்று கூறிவிட்டுத் தேவதை சென்றது.

பரபரப்புடன் ஓட்டமும், நடையுமாக அரண்மனையையடைந்த குமுதம், முதல் காரியமாக உறையிலிருந்த கண்ணாடியை வெளியேயெடுத்து, அவசர அவசரமாக அதற்குள் தன் உருவத்தைப் பார்த்தாள்.



ஐயோ! இதென்ன ஏமாற்றம்! 'தொப்'பென்று கண்ணாடியைக் கீழே போட்டாள் குமுதம். காரணம், அவள் எதிர்பார்த்ததற்கு மாறாக கண்ணாடிக்குள் அந்தப் பழைய குமுதமே காட்சியளித்ததுதான்!

மறுநாள் பொழுது புலர்வதற்கு முன்பே, குமுதம் தோட்டத்தையடைந்து தேவதையை எதிர்பார்த்துக் காத்திருந்தாள். சற்று நேரத்திற்கெல்லாம் அவளைத் தேடி வந்த தேவதை ஒரு விஷமச் சிரிப்புடன், "பெண்ணே! விஷயம் விளங்கி விட்டது. கண்ணாடியை வெளியில் எடுக்கக் கூடாது என்று நான்தான் உன்னை எச்சரித்திருந்தேனே, நீ அதை எடுத்துப் பார்த்து விட்டாய்!" என்று கேலியாகக் கூறவும், குமுதத்தின் கண்கள் கலங்கின. அவள் தன் செய்கைக்காக வருந்துவதைக் கண்ட தேவதை மனம் இரங்கி விஷயத்தை விளக்கி வைத்தது.

"குமுந்தாய், என்னுடைய சக்தியினால் உன் ரூபத்தையே அடியோடு மாற்றி விட்டதாக நீ எண்ணி விட்டாய்; அதனால்தான் ஆவலுடன் கண்ணாடிக்குள் உன் உருவத்தைப் பார்த்து ஏமாந்தாய்! உன் சுய ரூபம் உன்னிடம்தான் இருக்கிறது. பிறர் கண்களுக்கு மட்டும் நீ ஒரு தேவ கன்னிகை மாதிரி தோன்றும்படி நான் செய்தேன்! நீ கோரியதும் அதுதானே? இப்பொழுது விளங்கியதல்லவா, விஷயம்?" என்று கேட்டுவிட்டு, மறுபடியும் அவளை நோக்கி, "அதற்காக நீ வருந்தாதே! இப்பொழுது பார், உன் உருவத்தை!" என்று கூறி அவள் எதிரே கண்ணாடியைத் தலைகீழாகப் பிடித்தது.

ஆஹா! குமுதத்திற்கு ஒரு விநாடி தன் கண்களையே நம்ப முடியவில்லை. காரணம், கண்ணாடிக்குள் அவள் ஓர் அப்ஸரஸ் போலக் காட்சியளித்ததுதான்!

இனி, அவளை விரும்பாத ராஜகுமாரனும் இருக்க முடியுமோ?

# மாதர் மகாநாட்டில்......



ராஜகுமாரி அமிர்த கௌர்



ஸ்ரீமதி ஸோரஹோரன்
(இந்தோனேஷியா)



லேடி ராம ராவ்



ஸ்ரீமதி அம்முசுவாமிநாதன்



ஸ்ரீமதி லீலாமணி



ஸ்ரீமதி கல்பனா தத்
(கம்யூனிஸ்ட்)




ஸ்ரீமதி ஸசர்யதர்மி
(இந்தோனேஷியா)



ஸ்ரீமதி ஜெப்வாலா



ஸ்ரீமதி மித்தன் லாம்
(பம்பாய் ஷெரீப்)

# பெண்மை வாழ்க!

ஸ்ரீமதி வஸுமதி

சாதாரணமாக நான் கனவு காணாத நாட்களே இல்லை. சில தினம் அர்த்தமற்ற, ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாத கனவாக இருக்கும். சிலதினம் அரை குறையாக நினைவுக்கு வரும். ஆனால் சென்ற டிசம்பர் மாதம் 25-ம் தேதி நான் கண்ட கனவு இருக்கிறதே, அதை என்றுமே மறக்க முடியாது. ஸ்ரீ சுப்ரமண்ய பாரதியார் புன்னகையுடன் கனவில் வந்தார். எனக்கு ஆனந்தம் தாங்கவில்லை. "வரவேணும், வரவேணும்" என்று உபசரித்தேன். "எட்டயபுரத்தி லிருந்து வந்தாற் போலவா? தங்கள் வருகைக்கு நான் பெரிய பாக்கியம் செய்திருக்கிறேன்" என்றெல்லாம் உபசரித்தேன். முதலில் அவர் மட்டும் வந்தாரென நினைத்தேன். பின்னோடு அவருடைய சகாக்கள் கோஷ்டியும் வந்தது. என் ஆவல் நிறைந்த கேள்விகளுக்கு அவர் பதில் சொல்லாமல்,

"பெண்மை வாழ்கென்று கூத்திடுவோமடா
பெண்மை வெல்கென்று கூத்திடுவோமடா
தண்மைஇன்ப நற்புண்ணியஞ் சேர்ந்தன
தாயின்பேரும் சதியென்ற நாமமும்"

என்று பாட ஆரம்பித்தார். அவருடைய சகாக்கள் கூத்திட்டார்கள். இந்த ஆரவாரம் ஒருவாறு அடங்கின பிறகு என்னுடைய கேள்விக்குப் பதிலளித்தார்.

அதாவது டிசம்பர் 29-ம் தேதி நடக்கப்போகும் மாதர் மகாநாட்டிற்காகத் தாம் விஜயம் செய்திருப்பதாகச் சொன்னார். அவர் பல பாடல்களில் பாடியிருக்கும் புதுமைப் பெண்களை நேரில் பார்ப்பதற்கு விரும்பி வந்தாராம். "அப்படியானால் சென்னையில் ஒரு வாரத்துக்கு மேல் தங்குவீர்களல்லவா? நம் வீட்டில் ஒருவேளை சாப்பிட வரவேணும்" என்று என்னுடைய சம்பிரதாய உபசாரத்தைச் சொன்னேன். இவ்வளவும் கனவோ நனவோ என்னும் சந்தேகம் இன்னும் எனக்குத் தீரவில்லை.

*

மகாநாட்டிற்கு நிதி உதவி செய்யச் சில இடங்களுக்கு ஸ்ரீமதி பார்வதி அவர்களுடன் போகும்படி நேர்ந்தது. அப்பொழுது சிலரிடம் மகாநாட்டின் விண்ணப்பத்தைக் கொடுத்துவிட்டு, அவ்வளவு செலவு ஆகும், இவ்வளவு செலவு ஆகும், இத்தகைய பெரும் பொறுப்பு என்றெல்லாம் சொல்லுவார். அவர்கள் அதை வாங்கி அரை குறையாகப் பார்த்துவிட்டு, "சரி, பார்த்து ஏதாவது அனுப்பி வைக்கிறேன்" என்று சொல்வார்கள். (அதற்கு அர்த்தம் அனைவருக்கும் தெரிந்ததுதான்). உடனே ஸ்ரீமதி பார்வதி, "பெட்ரோல் சிக்கனத்தில் எங்களால் இரண்டாவது தடவையாக வர வசதியில்லை; கையெழுத்துப் போட்டு விடுங்கள்" என்று நோட் புஸ்தகத்தை நீட்டுவார். அதற்கும் அவர்கள் தயங்குவதைக் கண்டால், "மகாநாட்டிற்கு அயல் நாடுகளிலிருந்து கூடப் பிரதிநிதிகள் வருகிறார்கள். ஸ்ரீமதி ராஜகுமாரி அமிருத கௌரி வரப்போகிறார்கள்" என்று ஒரு பிரயோகம் செய்வார். உடனே இருபத்தைந்து ரூபாய் போடலாமா வேண்டாமா என்று யோசிப்பவர்கள், ஐம்பது ரூபாயாகப் போட்டு விடுவார்கள். (எல்லாரும் இப்படியல்ல. சிலர் தயங்காமல் ஆசியுடன் அளித்ததையும், சிலர் தட்டாமல் கொடுத்ததையும், சிலர் வலுவில் கொண்டுவந்து கொடுத்ததையும் மறக்க முடியாது.)

பணம் சேர்க்கும் அநுபவங்களினால் கொஞ்சம் சோர்வு பெற்றிருந்த எனக்கு பாரதியார் தரிசனம் உற்சாகத்தை ஊட்டியது. பாரதியாரே போற்றி ஆசீர்வதிக்கும்பொழுது மகாநாடு வெற்றிகரமாக நிறைவேறுமென்ற நம்பிக்கை பிறந்து விட்டது.

26-ம் தேதி மாலை நான்கு மணிக்கு மீனம்பாக்கம் மைதானத்தில் அநேக சகோதர சகோதரிகள் ஸ்ரீமதி ராஜகுமாரி அமிருத கௌரி அவர்களை வரவேற்றார்கள். சுயம் சேவகிகள் அணிவகுத்து நின்று வந்தனம் செய்ததும், ராஜகுமாரி அமிருதகௌரி அவர்களைக் கூப்பிய கையுடன் சுற்றிச் சுற்றி வந்ததும், கண்கொள்ளாக் காட்சியாக அமைந்திருந்தது. பிரயாணக் களைப்பைக்கூட லக்ஷியம் செய்யாமல் ஸ்ரீமதி ராஜகுமாரி அமிருதகௌரி

பத்திரிகைக்காரர்களுக்கும், இதரர்களுக்கும் அன்புடன் பதிலளித்தார். அன்று ஐந்து மணிக்குப் பம்பாய் ஷெரீப்பாகிய ஸ்ரீமதி மிதன்லாம் என்பவர் வந்தார்.

தமிழ்நாட்டிலிருந்தும் வடநாட்டில் பல பகுதிகளிலிருந்தும், அமெரிக்கா, பிரான்ஸ், சைனா, இந்தோனேஷியா, இலங்கை முதலிய அயல் நாடுகளிலிருந்தும் இருநூற்று இருபத்தைந்து பிரதிநிதிகளும் நூற்று முப்பத்தி நான்கு பார்வையாளர்களும் இம்மகாநாட்டிற்கு வந்திருந்தார்கள். இவர்களில் சிலர் ரயிலிலும், சிலர் விமானத்திலும் வந்து இறங்கினார்கள். ரயில்கள் எல்லாம் காலந் தப்பியே வந்தன. எனினும் பொறுமையுடன் காத்திருந்து, அங்குமிங்கும் அலைந்து, வந்த சகோதரிகளை வரவேற்று ஜாகைக்கு அழைத்துச் செல்லும் அரும் செயலை ஹிந்துஸ்தான் சாரணர்களும் ஸ்ரீமதி பார்வதி அவர்களும் நிறைவேற்றினார்கள்.

மகாநாடு தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் அமைக்கப்பட்டிருந்த பெரிய பந்தலில் கூடிற்று. பிரதிநிதிகளும், பார்வையாளர்களும் மேரி ஆரி கலாசாலையிலும், ஐஸ் ஹவுஸிலும் தங்கினார்கள். அதை ஒட்டி ஏற்படுத்திய கண்காட்சிச் சாலை லேடி வெல்லிங்டன் ஹைஸ்கூலில் இடம் பெற்றது. இப்படி ஒவ்வொன்றும் ஒவ்வோரிடத்தில் இருந்தும், எல்லாக் காரியங்களும் ஒரு விதக் குறைவும் இன்றி, காலதாமதமின்றி நடைபெற்றது ஆச்சரியமான விஷயம்.

29-ம் தேதி காலை லேடி வெல்லிங்டன் கலாசாலையின் முன்னால் ஸ்ரீமதி ராமராவ் அவர்களால் கொடியேற்றுவிழா நடத்தப்பட்டது. கடற்கரை ஓரமாகக் கம்பத்தில் கொடி பறந்த காட்சி கம்பீரமான சூழ்நிலையுடன் இருந்தது.

ஒன்பது மணிக்கு ஸ்ரீமதி மிதன்லாம் அகில இந்திய மாதர் மகா நாட்டின் கண்காட்சிச் சாலையை லேடி வெல்லிங்டன் கல்லூரியில் திறந்து வைத்தார். கண்காட்சி சிறிய அளவில் அமைக்கப்பட்டிருந்தாலும் கலாசாரப் பண்புடன் அழகாக விளங்கிற்று.

★

அன்று மாலையில் தேனாம்பேட்டையில் அமைந்திருந்த பெரிய பந்தலில் பிற்பகல் இரண்டு மணி முதல் பெருங் கூட்டம் கூடிவிட்டது. எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் மேடையின் மேல் நடக்கும் விஷயங்கள் மறைக்காமல் தெளிவாகத் தெரியும்படி மாதர் மகாநாட்டுப் பந்தல் அமைந்திருந்தது. அந்த விஸ்தாரமான பந்தலில் கொஞ்சங் கூடக் காலி இடமின்றி ஜனங்கள் நிறைந்து விட்டார்கள். குறிப்பிட்ட நேரத்தில் மகா நாட்டின் தலைவியார் ஸ்ரீமதி அனசூயாபாய் காலே, லேடி ரை, மாதர் சங்கத்தின் தாயாகிய ஸ்ரீமதி கஸின்ஸ் அம்மையார் முதலியவர்கள் பாண்டு வாத்திய கோஷத்துடன் பந்தலில் பிரவேசித்தார்கள். ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அம்மாள் தமது பல அலுவல்களுக்கிடையே இம் மகாநாட்டில் பிரார்த்தனை கீதம் பாட இசைந்தது பற்றி எல்லாருக்கும் ஒரே பெருமையாயிருந்தது. ஸ்ரீமதி எம். எஸ். எஸ். பிரார்த்தனை பாடிக் கொண்டிருந்தபோது, என்னருகில் இருந்த சகோதரி கையிலிருந்து ஒரு 'ஸேப்டி பின்' கீழே விழுந்தது. அந்தச் சத்தம் கேட்டுச் சிலர் திரும்பிப் பார்த்தார்கள். பல்லாயிரக் கணக்கான மக்கள் கூடியிருக்கும் அந்தப் பெரிய பந்தலில் ஊசி விழும் சத்தம் கேட்கும்படியான நிசப்தம் குடிகொண்டிருந்தது என்பதை அறிந்தேன்.

பிரார்த்தனைக்குப் பின் மகா நாட்டுக்கு ஸ்ரீமதி அனசூயாபாய் காலே அவர்களைத் தலைமை வகிக்கும்படி ஸ்ரீமதி ராமராவ் கேட்டுக் கொண்டார். டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி அதை ஆமோதித்தார். பிறகு ஜவாஹர்லால் நேரு ஸ்ரீமதி ஸரோஜினி நாயுடு,



மாதர் சங்கத் தலைவர்
ஸ்ரீமதி ராதாபாய் சுப்பராயன்

மேற்கு வங்காள கவர்னர் ராஜாஜி, ஸ்ரீமதி மவுண்ட் பேட்டன் முதலிய பலர் அனுப்பிய வாழ்த்துச் செய்திகள் படிக்கப்பட்டன. பிறகு வரவேற்புக் கமிட்டியின் தலைவரான ஸ்ரீமதி எஸ். அம்புஜம்மாள், ஹிந்தியிலும் தமிழிலும் பேசும்போது, மாதர்களின் அன்பு, பொறுமை இவைகளால் வீட்டறத்தையும், நாட்டறத்தையும் காத்து வளர்க்க வேணுமென்று சொல்லி விட்டு, அன்னிபெஸண்ட் அம்மையார் ஆரம்பித்து வைத்த இம் மாதர் சங்கத்தைப் பற்றி விவரமாகச் சொன்னார்.



மாதர் மகாநாட்டின் வெற்றிக்குப் பெரிதும் காரணமாயிருந்த ஸ்ரீமதி சரோஜினி வரதப்பன் : ஸ்ரீமதி சாவித்திரி ராஜன் : ஸ்ரீமதி அம்புஜம்மாள் ; ஸ்ரீமதி சீதாதேவி.

அடுத்தபடியாகத் தலைவியார் ஸ்ரீமதி அனசூயாபாய் காளே பேசியபோது, "சுதந்திரப் போராட்டத்தில் ஸ்திரீகள் தைரியமாகப் பங்கெடுத்துக் கொண்டார்கள். ஆனால் ஆகஸ்ட் 15-ம் தேதி நாம் அடைந்த சந்தோஷத்தை அனுபவிக்க முடியாமல் பஞ்சாப் பரிதாபம் வந்து விட்டது. நற்சமயம் நம்முடைய முயற்சியால் சமாதானம் ஏற்படும்படி செய்யவேண்டும்" என்று கேட்டுக் கொண்டார். பதினாறு வருஷங்களுக்கு முன் இதே மகாநாட்டிற்குச் சென்னைக்கு வந்ததாகவும், இன்று மாதர் மகாநாடு பெரும் ஸ்தாபனமாக வளர்ந்திருப்பதையும் பெருமையுடன் எடுத்துச் சொன்னார்.

பிறகு வெளிநாட்டுப் பிரதிநிதிகளும் நம் நாட்டுப் பிரதிநிதிகளும் ஐந்தைந்து நிமிஷம் பேசினார்கள். இந்தோனேஷியப் பிரதிநிதி பேசும்பொழுது ஜனங்களுடைய உற்சாகம் அளவற்றதாக இருந்தது. ஸ்ரீமான் டி. ஆர். வெங்கட்ராம சாஸ்திரியார், "ஸ்திரீகள் ஆதி காலத்தில் ஆண்களோடு சமமாக நடத்தப்பட்டார்கள். இடைக் காலத்தில் அவர்கள் அந்தஸ்தைச் சிறிதளவு இழந்திருந்தாலும் மீண்டும் அடைந்து விட்டார்கள்" என்று சொன்னார். ஸர். ஏ. லக்ஷ்மணசாமி முதலியார், "ஸ்திரீகளின் கல்விதான் ஒரு நாட்டின் முக்கிய பிரச்னை என்றும், பெண்களுக்குப் பெரிய நகரங்களில் எல்லாம் கல்லூரிகள் வேண்டும்" என்றும் தெரிவித்தார்.

*

இரவு நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்கள், வரவேற்புக் கமிட்டியாளர்கள், பிரதிநிதிகள் இவர்களுக்குக் கிண்டியில் ஸ்ரீமதி லேடி நை அவர்களால் ஒரு விருந்து அளிக்கப்பட்டது. மகாநாட்டின் ஆரம்ப வேளையிலிருந்து லேடி நை அவர்கள் சகஜமாகச் சகோதரிகளுடன் கலந்துகொண்டு உதவி செய்து வந்தார்.

30-ம் தேதி மாலை ராஜாஜி மண்டபத்தில் (பாங்க்வெட்டிங் ஹால்) கூடிய பொதுக் கூட்டத்தில் பேசிய ஸ்ரீமதி ராஜகுமாரி அமிருதகௌரி, இமயத்திலிருந்து ஆரம்பித்து இந்தியா முழுவதும் வியாபித்திருக்கும் ஜாதிப் பிரிவினைகளையும், அதனால் ஏற்படும் பூசல்களையும் விளக்கி, இத்தீமையை எப்படியாவது தாய்மார்கள் தங்களுடைய பெரு முயற்சியால் எதிர்காலத்தில் ஒழித்துவிட வேண்டும் என்றார். அன்று சுயம்சேவகிகளால் பிரதிநிதிகளுக்கு ஒரு கதம்ப நிகழ்ச்சி நடத்திக் காண்பிக்கப்பட்டது. இந்நிகழ்ச்சியை ஸ்ரீமதி பத்மா சுவாமிநாதன், ஸ்ரீமதி வஸந்தா கிருஷ்ணன், ஸ்ரீமதி சிவபாலா, ஸ்ரீமதி மஞ்சுபாஷிணி ஆகியவர்கள் பெருமுயற்சி எடுத்து நன்கு நிறைவேற்றினார்கள்.

31-ம் காலை மீண்டும் தேனாம்பேட்டைப் பந்தலில் மாதர் மகாநாடு கூடியது. சில முக்கியமான தீர்மானங்கள் நிறைவேறின. உணவு ரேஷன் இவைகளைப் பற்றிய பிரச்னைகள் பேசப்பட்டன. நிர்மாணவேலையைப் பற்றி ராஜகுமாரி அமிருதகௌரி பேசினார். இந்த மகாநாட்டின் லக்ஷியம் இந்தியாவின் முன்னேற்றத்திற்குப் பாடுபடுவதாகுமென்பதைத் தெளிவுபடுத்தினார்.

அன்று மாலை ரிப்பன் பில்டிங்கில் கார்ப்பரேஷன் மேயர் ஸ்ரீ யு. கிருஷ்ணராவ்

அவர்கள் பிரதிநிதிகளுக்கும் இதரர்களுக்கும் ஓர் அழகான வரவேற்பும் தேநீர் விருந்தும் அளித்தார். பிறகு ஏழு மணிக்கு விஜயநகரம் ராணி அவர்களால் ராஜாஜி மண்டபத்தில் தேநீர் விருந்தும், கலாக்ஷேத்திர மாணவிகளால் 'குசேல சம்பவம்' என்ற நாடக நாட்டியமும் நடித்துக் காண்பிக்கப்பட்டன.

ஜனவரி முதல் தேதி மீண்டும் தேனும் பேட்டைப் பந்தலில் மகாநாடு கூடியது. மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானங்களில் முக்கியமானவை 'கண்ட்ரோலை எடுக்கக் கூடாது, மூலாதாரக் கல்வி நாடெங்கும் பரவ வேண்டும், நாட்டின் சமாதானத்துக்குப் பெருமுயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும்' என்பவைதான். வந்திருந்த பிரதிநிதிகளுக்கும் இதரர்களுக்கும் ஸ்ரீமதி மங்களாம்பாள் உட்லண்ட்ஸ் ஹோட்டலில் ஒரு தேநீர் விருந்து அளித்தார்.

*

மாதர் மகாநாடு இவ்வளவு வெற்றிகரமாக நடைபெற்றதற்கு முக்கிய காரணமாயிருந்தவர் ஸ்ரீமதி சாவித்திரி ராஜன். நான்கு மாதமாய் அன்ன ஆகாரமின்றி மூளைக்கும், சரீரத்திற்கும் ஓய்வு கொடுப்பதையே மறந்து இரவு பகலாய் அவர் உழைத்ததினால்தான் மகாநாடு இவ்வளவு சிறப்பாக நடந்தது.

அவருக்கு உதவி செய்தவர்களில் நீறு பூத்த நெருப்புப் போல், பார்ப்பதற்குச் சாதுவாயும் வேலையில் புலியாகவும் திறமையுடன் காரியம் செய்தவர் இளஞ் சகோதரி ஸ்ரீமதி ஸரோஜினி வரதப்பன்.

ஸ்ரீமதி என். அம்புஜம்மாள் அவர்களை நாங்கள் ஏகமனதாக வரவேற்புக் கமிட்டியின் தலைவியாகத் தேர்ந்தெடுத்தோம். அவர்தான் அந்தப் பதவிக்கு அருகதையானவர் என்பதில் சந்தேகமில்லை.

இன்னும் மாதர் மகாநாடு வெற்றிகரமாக நடப்பதற்கு உழைத்த வரவேற்புக் கமிட்டிக் காரியதரிசி ஸ்ரீமதி பாரிஜாதம் நாயுடுவையும், மாதர் சங்கத்தின் நிர்வாகக் கமிட்டி அங்கத்தினரான ஸ்ரீமதி சீதாதேவி பார். அட். லா. வையும் மறக்க முடியாது.

தென்னாடு அதிதி சத்காரத்தில் பெயர் போனது. அப்படிப்பட்ட பழம் பெருமையை நிலை நாட்டியவர் ஸ்ரீமதி விச்வநாதன். அன்னபூரணி என்றால் அவருக்குத்தான் தகும். சாப்பாட்டு வைபவத்தைச் சிலாகித்துப் பேசாதவர்களே யில்லை.

கவியரசர் பாரதியார் நவராத்திரி பாட்டில் மூன்று விதமாகத் தேவியை வணங்கினார். கலைமகள், மலைமகள், அலைமகள் — இம் மூவருடைய கடாக்ஷம் மகாநாட்டிற்கு ஏற்பட்டது போல் அநேக லக்ஷ்மி என்ற பெயர் கொண்ட ஸ்திரீகளும், ஸரஸ்வதி என்ற பெயருடைய ஸ்திரீகளும், சக்தியின் பெயர் கொண்ட ஸ்திரீகளும் உற்சாகத்துடன் ஓடி ஆடி வேலை செய்தார்கள். பிரதிநிதிகளும் பார்வையாளர்களும் ஐந்நூறு பேர் என்றால், அவர்களை உபசரிக்கச் சென்னை சகோதரிகள் ஐந்நூறு பேர் இருந்தார்கள். வேலை செய்த அனைவருக்கும் உற்சாகமூட்டி நடத்தி வைத்தவர் எங்கள் சங்கத்தின் தலைவர் ஸ்ரீமதி ராதாபாய் சுப்பராயன் அவர்கள். டாக்டர் கஸின்ஸும், டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டியும் இந்த ஸ்தாபனத்திற்குத் தாய் ஸ்தானம் வகிக்கிறார்கள்.

சேலத்திலிருந்து பிரதிநிதியாக வந்த ஒரு சகோதரி மகாநாடு முடிந்ததும் என்னிடம் மிகப் பெருமையாக மகாநாட்டைப் புகழ்ந்து சொன்னார். தங்குமிடத்தில் நடந்த உபசரிப்பையும், கடலோரக் காட்சிகளையும் என்றென்றும் மறக்க முடியாது. ஆனால், மகாநாட்டில் நடந்த தீர்மானங்களையும் சில பிரசங்கங்களையுமாவது தமிழில் சொல்லியிருந்தால் ரொம்ப நன்றாக இருந்திருக்கும். இருந்தாலும் மகாநாட்டில் கலந்துகொண்ட அந்த நான்கு நாட்களில் மற்றவர்களுடைய சிநேகபாவமும், பரிச்சயமும் உலகம் முழுதும் சுற்றின பயன் கிடைத்தது போன்ற உணர்ச்சியை உண்டாக்கிற்று என்று கூறி மகிழ்ந்தார்.

முதல் தேதி மாலை கடைசியாக ஒரு கூட்டம் நடந்தது. இந்தோனேஷியா பிரதிநிதிகளும், இதரர்களும் பேசினார்கள். மகாநாட்டில் கலந்துகொண்ட அனைவருக்கும் ஸ்ரீமதி என். அம்புஜம்மாள் அவர்களால் வந்தனோபசாரம் சொல்லப்பட்டது. பிறகு ஜன கண மன கீதத்துடன் மங்களகரமாக மகாநாடு முடிவடைந்தது.

அச்சமயம் என் காதில் லேசாக,

" கும்மியடி தமிழ்நாடு முழுதும்
குளுங்கிடக் கைகொட்டி கும்மியடி "

என்ற பாட்டு காற்றோடு காற்றாக வந்தது.

காதலொருவனைக் கைபிடித்தே அவன்
காரியம் யாவினும் கைகொடுத்து
மாதரறங்கள் பழமையைக் காட்டிலும்
மாட்சி பெறச்செய்து வாழ்வமடி "

என்ற காற்றிலே வந்த பாட்டு முடிந்தது.

# சந்திர ஹாரம்

ஆசிரியர்.........மொழிபெயர்ப்பு
பிரேம்சந்த்.........ரா. வீழிநாதன்

## முப்பத்தெட்டாம் அத்தியாயம்
## பத்மாவைப் பார்த்தான்!

போலீஸாருக்குப் பயந்து கொண்டு வெளியிலேயே தலை காட்டாமல், தேவீந்திரனுடைய வீட்டுக்குள்ளேயே அடைந்து கிடந்த ரமாநாத் இரண்டு மாத காலமாக அரச போகத்தில் ஆழ்ந்திருந்தான். அவன் தங்குவதற்கென்று ஓர் அழகிய தனி பங்களா; அவன் சொன்ன சொல்லைக் கேட்பதற்குப் பணியாட்கள்; வெளியே உலாவப் போய் வருவதற்கு அவனுக்கென்று ஒரு தனி மோட்டார்! அது மட்டுமா? அவனுக்கென்று சமையல் செய்து போடுவதற்காகவே ஒரு தனிச் சமையற்காரன்! இம்மாதிரியெல்லாம் அவனுக்குப் போலீஸார் சகல சௌகரியங்களும் செய்து கொடுத்திருந்தனர். பெரிய பெரிய ஆபீஸர்கள் கூட அவனுடைய வாயிலிருந்து வெளிவரும் சொற்களைக் கேட்பதற்காகச் சாதக பட்சிபோல ஏங்கிக் கிடந்தனர் என்று சொன்னால் மிகையாகாது. தனக்குக் கிட்டியிருக்கும் அந்தச் சுகபோக வாழ்வை எண்ணி அவன் மிகவும் மனம் பூரித்தான். அது மட்டும் அல்ல, 'தானும் ஒரு பரம்பரைப் பணக்காரன்' என்று மட்டற்ற மண்டைக் கர்வமும் கொண்டான். அந்த வாழ்வின் இன்பத்தில் அவனுடைய மூளையே மழுங்கி விட்டது. 'நாம் என்ன செய்கிறோம்? நாம் செய்வது நியாயமா, அநியாயமா? நம் கையால் எத்தனையோ நிரபராதிகள் மடிந்து விடுவார்களே!' என்றெல்லாம் அவன் துளிக்கூடச் சிந்தித்துப் பார்க்கவில்லை. 'அவன் தனிமையில் இருந்தால் அதைப் பற்றியெல்லாம் சிந்திக்க ஆரம்பித்து விடுவானோ?' என்ற ஐயத்தில் ஆபீஸர்களும் அவனுக்கு அம்மாதிரிச் சந்தர்ப்பம் அளிக்காமல் சதா சர்வ காலமும் அவனைச் சூழ்ந்திருக்கலாயினர். இரவு வேளைகளில் கூட அவனை எங்கேயாவது சுற்றுவதற்கு அழைத்துப் போவார்கள். அவன் மனதுக்கு மகிழ்ச்சி யளிக்கும் விஷயத்தில் — அதாவது அவனுடைய மனது மாறாமல் இருக்க வேண்டுமே என்பதற்காக—யாதொரு விதமான குற்றங் குறைகளும் ஏற்படாமல் கண்ணுங் கருத்துமாகக் கவனித்து வந்தார்கள். குற்றம் சாட்டப்பட்டவர்களை மாஜிஸ்ட்ரேட் செஷன்ஸுக்கு அனுப்பிய அன்றைக்கு அதிக மகிழ்ச்சியுற்றது ரமாநாத்தான். ஏனெனில் அவனுக்குத் தன் பாக்கிய சூரியன் உதயமாகி விட்டது போலத் தோன்றியது.



செஷன்ஸ் கோர்ட்டில் தங்கள் ஜபம் சாயாது என்ற விஷயம் போலீஸாருக்கு நன்றாகத் தெரிந்த விஷயம்தானே! அதுவும் அப்பொழுதிருந்த செஷன்ஸ் ஜட்ஜ் ஓர் இந்தியர்; போதும் போதாக் குறைக்கு மிகவும் கண்டிப்

பான பேர்வழி. அவருக்குப் போலீஸ்காரர்களும் ஒன்றுதான்; திருடர்களும் ஒன்றுதான். அவரிடம் தயவு தாட்சண்யம் என்பது தலைகாட்டுவதே கிடையாது. தமக்கு நியாயம் என்று படுவதை எடுத்துக்கொண்டுதான் அவர் எந்த வழக்கிலும் தீர்ப்பு அளித்து வந்தார். ஆகவே போலீஸ்காரர்கள் ரமாநாத்தை அழைத்துப் போய் சம்பவம் நடந்த இடத்தை நன்றாகச் சுற்றிக் காட்டிவிட வேண்டும் என்று தீர்மானித்தனர். ஜமீன்தார் ஒருவரின் மாடமாளிகையில் ரமாநாத் தங்குவதற்கென்று சகல வசதிகளும் செய்திருந்தனர். பகல் வேளைகளில் எல்லாம் அவனை வேட்டையாட அழைத்துப் போவார்கள்; இரவு வேளைகளில் பாட்டும் கூத்துமாகப் பொழுதைப் போக்குவார்கள். இல்லையெனில் சீட்டாட உட்கார்ந்து விடுவார்கள். சிற்சில சமயங்களில் ஓடங்களில் ஏறி ஆறுகளில் உல்லாசப் பிரயாணம் கூடப் போய் வருவார்கள். அங்கே தங்கியிருந்த நாட்களில் ரமாநாத் அரசிளங் குமரனைப் போல ஆனந்த வாழ்வு வாழ்ந்து வந்தான்.

அந்த வாழ்வில் அவனுக்கு ஒரே ஒரு குறை மட்டும் இருந்தது. அந்தச் சமயத்தில் பத்மா தன்னுடன் இல்லாதது அவனுக்கு ஒரு பெருங் குறையாகவேதான் பட்டது. அவன் பிறர் கையை நாடுபவனாக — அஷ்ட தரித்திரனாக — இருந்த வரையில் அவனுடைய ஆசைகள் எல்லாம் அடங்கிக் கிடந்தன. ஆனால் இப்பொழுது கிட்டியிருக்கும் சுகபோக வாழ்வு அடங்கிக் கிடந்த அவனுடைய ஆசைகளைத் தட்டி எழுப்பி விட்டது.

'இந்த வழக்கு முடிந்ததும் நமக்கு ஒரு நல்ல வேலையாகக் கிடைத்துவிடும். அப்புறம் ஊருக்குப் போய்ப் பத்மாவை எப்படியாவது சமாதானப்படுத்தி இங்கே அழைத்துக்கொண்டு வந்து விடலாம்; ஆனந்தமாகப் பொழுதைப் போக்கலாம். ஆனால் அந்தப் பழைய குருட்டாம் போக்கில் வாழ்க்கையை நடத்தக் கூடாது; வாழ்வைப் புதிதாக மாற்றி யமைத்துக் கொள்ள வேண்டும். தன் மானத்தைக் காத்துக் கொள்ள வேண்டும். வரைமுறை யற்ற வாழ்க்கை நடத்தவே கூடாது. கட்டுப்பாடுகளையும், உயர் நோக்கங்களையும் கொண்டதாக நம் வாழ்க்கை மாறிவிட வேண்டும். உண்ணுவதும் உறங்குவதுமாக வாழ்க்கை முடியக் கூடாது. பணத்துக் கென்று 'லபோ, லபோ' என்று அடித்துக் கொள்ளும் வாழ்க்கையாகவும் ஆகிவிடக் கூடாது. இந்த வழக்குடன் நம்முடைய நிலையற்ற — முறையற்ற வாழ்க்கையும் முடிந்துவிட வேண்டும்' என்று அவன் மனதில் விதவிதமான கற்பனைகள் எல்லாம் செய்து கொள்ளலானான். 'ஆசைக்கு ஓர் அளவில்லை!' என்கிறார்களே, அது முற்றிலும் உண்மை. அந்த ஆசைதான் அவனை இந்த நிலைமைக்கு ஆளாக்கியது. அதே ஆசைதான் இந்தப் புதிய சீர்திருத்திய வாழ்க்கையைப் பற்றியும் அவனைக் கனவு காணச் செய்து கொண்டிருந்தது. குடியர்களைப்போல இம்மாதிரி மனிதர்களும் தினந்தோறும் புதுப்புதுச் சங்கற்பங்கள் செய்து கொள்ளுகிறார்கள். ஆனால் அவை ஒருபொழுதும் செயலாக முகிழ்வதில்லை. அந்தச் சங்கற்பங்களின் முடிவு என்ன ஆகிறது என்கிறீர்கள்? அவைகளின் காரணமாக இன்னும் பல புதுப் புது ஆசைகள் அவர்களுடைய மனத்தில் எழுகின்றன. அந்த ஆசைகள் பூர்த்தியுறும் வரை, கால வரையறையின்றி அவர்கள் 'தங்கள் சங்கற்பங்களை ஒத்திப் போட்டால் என்ன?' என்று யோசிக்கிறார்கள். ஆகவே அவர்களுடைய வாழ்க்கையில் புது நாள் உதயம் ஒருபொழுதுமே ஏற்படுவதில்லை.

ஒரு மாத காலம் நாட்டுப்புறத்தில் வாசம் செய்த பின்னர், ரமாநாத் தன் போலீஸ் கூட்டாளிகளுடன் தன்னுடைய பங்களாவுக்குத் திரும்பிக் கொண்டிருந்தான். தேவீதீன் வீட்டு வாசல் வழியாகக் கார்கள் வந்து கொண்டிருந்தன. தேவீதீனுடைய வீடு சற்றுத் தொலைவில் இருக்கும்பொழுதே அவனுடைய கண்கள் அவன் வீட்டைப் பார்க்கலாயின. அது மட்டும் இல்லை; அவனுடைய கண்கள் அவனை யறியாமலே தான் தங்கி யிருந்த அறையின் ஜன்னலில் போய்ப் பதிந்தன. ஜன்னலண்டை யாரோ நிற்பது போல அவனுக்குத் தோன்றியது. 'இந்த வேளையில் தேவீதீனுக்கு அங்கே என்ன வேலை?'





என்று யோசித்தவனாய், ரமாகாந் இன்னும் கூர்ந்து கவனித்தான். யாரோ பெண் போல் அல்லவா தோன்றுகிறது! அவன் வீட்டில் பெண் வரக் காரணம்? ஒருவேளை கிழவன் அந்த அறையை வாடகைக்கு விட்டிருப்பானோ? இதுவரை அவன் அப்படியெல்லாம் செய்தது நாம் பார்த்ததில்லையே!

மோட்டார் இன்னும் சற்றுச் சமீபித்தது. அந்தப் பெண் உருவம் இன்னும் தெளிவாக அவனுக்குத் தென்பட்டது. அதைக் கண்டதும் அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. பத்மாபோல் அல்லவா இருக்கிறது! 'போல்' என்ன? அவளேதான்! ஆனால் அவள் இங்கே எப்படி வந்திருக்க முடியும்? அவளுக்குத்தான் என் விலாசம் தெரியாதே!......ஒருவேளை இந்தக் கிழம் கடிதம் எழுதியிருக்குமோ? பத்மாதான்! துளிக்கூடச் சந்தேகமில்லை. நம் கண்களே நம்மை ஏமாற்றுமா, என்ன?

அவன் உட்கார்ந்திருந்த காரை ஸப் இன்ஸ்பெக்டர்தான் ஓட்டிக் கொண்டிருந்தார். ரமாகாந் மிகவும் வினயமான குரலில், "இன்ஸ்பெக்டர் ஸார்! ஒரே ஒரு நிமிஷம். தயவு செய்து நிறுத்துங்களேன். தேவியிடம் ஒரு வார்த்தை சொல்லி விட்டு வந்துவிடுகிறேன்" என்றான். ஸப் இன்ஸ்பெக்டர் மோட்டாரின் வேகத்தைச் சற்றுக் குறைத்தார். ஆனால் என்ன நினைத்தாரோ, தெரியவில்லை; நிறுத்தாமல் காரை ஓட்டலானார்.

ரமாகாந்துக்கு ஆத்திரம் பொங்கி வந்தது. "நான் என்ன ஐயா? சொல்லுவதைக் கேளாமல் மேலே ஓட்டிக் கொண்டே போகிறீர்களே! என்ன அர்த்தம்?" என்று ஸப் இன்ஸ்பெக்டர்மீது சீறி விழுந்தான்.

ஆனால் ஸப் இன்ஸ்பெக்டர் மிகவும் சாந்தமான குரலில், "டிபுடி சூபரின்டென்டு ரொம்பக் கோபக்காரர் என்ற விஷயம்தான் உங்களுக்குத் தெரியுமே, ஸார்! அதனால்தான்......" என்று பதில் அளித்தார்.

பங்களாவை அடைந்த பின்னர், 'பத்மாவை எப்படிப் பார்ப்பது?' என்று ரமாகாந் யோசிக்கலானான். 'அவள் பத்மாதான்' என்பதில் அவனுக்கு எள்ளளவும் சந்தேகம் இல்லை. ஆகவே, அவன் 'அவளைப் பார்க்க என்ன செய்வது, எப்படிப் போவது?' என்னும் சிந்தனையில் அழுக்கேறிய ஆடைகளைக் களைந்து விட்டு மாற்று உடை உடுத்திக் கொள்ள வேண்டும் என்பதைக்கூட மறந்து விட்டான். பதினைந்து நிமிஷம் அவன் தன் அறைக்குள் கூட நுழையாமல் வாசலிலேயே நின்றான். ஒரு உபாயமும் தோன்றவில்லை. மூளைகூட அதற்குமேல் வேலை செய்ய மறுத்து விட்டது. ஆகவே அவன் அறைக்குள் சென்று கட்டிலைச் சரண் அடைந்தான்.

ஆனால் அவனுக்குப் படுக்கை கொள்ளவில்லை; எழுந்து எதிரேயுள்ள வராந்தாவுக்கு வந்து, இங்கும் அங்கும் நடை போடலானான். அதே சமயம் தெரு விளக்குகளும் ஏற்றப்பட்டன. வாசலில் காவற்காரன் நின்று கொண்டிருந்தான். ரமாகாந்துக்கு 'அவனை அப்படியே கழுத்தைத் திருகிப் போட்டுவிட்டால் என்ன?' என்று ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. 'எனக்கு மட்டும் ஒரு நல்ல வேலை கிடைத்து விடட்டும், அப்புறம் இந்தப் பயல்களை ஒரு கை பார்த்து விடுகிறேன்; 'டிஸ்மிஸ்'ஸே செய்து விடுகிறேன். பிசாசு மாதிரிக் கண்கொட்டாமல் நிற்கிறதைப் பார்! மூஞ்சியைப் பார்க்கவில்லை மூஞ்சியை! இந்த முகரக்கட்டைக்கு முண்டாசு வேறு! விளக்குமாற்றுக் கட்டைக்குப் பட்டுக் குஞ்சம் மாதிரி! கூலியாட்கள் சுமை தூக்குவதற்காகச் 'சும்மாடு' கட்டி வைத்துக் கொள்ளுவார்களே, அது மாதிரி இருக்கிறது! ஒரு நாய் உறுமினால் போதும், ஆள் பயந்து விழுந்தடித்துக் கொண்டு ஓடுவான். இப்பொழுது என்னடாவென்றால் பெரிய கோட்டையைக் காவல் காப்பவன்போல் அல்லவா விறைப்பாக நிற்கிறான்! இவன் பெரிய சிப்பாய், சவெட்டிச் சிப்பாய்தான்!' என்று ரமாகாந் மனத்துள் என்னவெல்லாமோ முணுமுணுத்துக் கொண்டான்.

அதே சமயம் ஒரு காவற்காரன் வந்து, "இன்ஸ்பெக்டர் ஐயா உங்களைக் கூப்பிடுறாங்க!" என்றான்.

ரமாகாந் அவன்மீது 'வள்'ளென்று சீறி விழுந்து, "இப்பொழுது அங்கே வா



எனக்கு நேரமில்லை என்று போய்ச் சொல்லு. இவர்கள் வைத்த வேலைக்காரனோ, நான்?'' என்றான்.

காவற்காரன் அங்கிருந்து நகர்ந்ததும், ரமாகாந்த் மறுபடியும் விட்ட இடத்திலிருந்து தன் யோசனையைத் தொடங்கினான். '...ஆமாம், பத்மா இங்கே எப்படி வந்திருப்பாள்? தனியாகத்தான் வந்திருப்பாளா, அல்லது வேறு யாராவது துணைக்கு வந்திருப்பார்களா? இந்தக் கொலைகாரப் பாவி ஸப் இன்ஸ்பெக்டர், இவளுடன் ஒரு வார்த்தைகூடப் பேச விடாமல் காரை ஓட்டிக் கொண்டு வந்து விட்டானே! பத்மா 'ஏன் ஓடினாய்?' என்று கேட்டால் என்ன பதில் சொல்லுவது? 'அம்மாதிரி இக்கட்டான சமயத்தில் நான் அதைத் தவிர வேறென்ன செய்திருக்க முடியும்? நீயே சொல்லு' என்று நான் ஒரு எதிர்க் கேள்வி போட்டால் அவள் அடங்கி விடுவாள்...நல்ல வேளை! இந்தக் கொஞ்ச கால சிரமம் வாழ்க்கைப் பிரசினையையே யல்லவா அடியோடு தீர்த்திருக்கிறது? இனிமேல் ஆனந்தமாகக் காலத்தைக் கழித்துவிடலாம்! இன்னும் கொஞ்ச நாட்கள் சென்றதும், எப்படியாவது முயற்சித்து அலகாபாத் பக்கத்துக்கே மாற்றிக் கொண்டு விட்டால் போகிறது.!'

இவ்வாறு வெகு நேரம் முன்னேறிக் கொண்டிருந்த சிந்தனை மறுபடியும் புரண்டு கொடுத்தது — 'பத்மாவையும் நம்முடன் வைத்துக் கொண்டால் என்ன? வெளியாரைப் பார்ப்பதற்குத் தடை விதித்திருக்கிறார்கள். அது ஒரு விதத்தில் நியாயம்தான். ஆனால் பத்மாவுடன் நான் இருப்பதற்கோ, பேசுவதற்கோ இவர்களுக்கு ஒரு ஆட்சேபணையும் இருக்க முடியாது—இப்பொழுதே போய் இதைப் பற்றிக் கேட்டுப் பார்ப்போமா?...... என்ன இருந்தாலும் இந்தப் பிரசினையை இப்பொழுது கிளப்புவது உசிதமில்லை. நாளைக் காலையில் பார்த்துக் கொள்ளுவோம்...இந்தத் தேஸீதின் ஓர் அதிசயப் பிறவி! முன்பெல்லாம் எத்தனையோ தடவைகள் வந்தான். இப்பொழுதோ இந்தப் பக்கம் தலைகாட்டுவதேயில்லை. ஒரு தடவை வந்து பத்மா வந்திருக்கும் விவரத்தைக் காவற்காரன் மூலம் சொல்லி யனுப்பி விட்டுப் போனால் இவனுடைய கால் தேய்ந்து விடுமோ? அப்புறம் பத்மாவை வரக் கூடாது என்று எவனால் தடுக்க முடியும்? தடுப்பவனை நான் ஒரு கை பார்த்துவிட மாட்டேனா? முன்பெல்லாம் அந்தத் தடைகள் அவசியமா யிருந்திருக்கலாம். இப்பொழுதுதான் என் சாட்சியங்கள் முடிந்து விட்டனவே! இனி மேல் அவர்களுக்கு எவ்விதத் தடையும் இருக்க நியாய மில்லையே! தாராளமாகப் பத்மாவை அழைத்து வந்து வைத்துக் கொள்ள அனுமதி தந்து விடுவார்கள்!'

இம்மாதிரிக் கற்பனைகளில் அவன் ஆழ்ந்திருந்த பொழுது, சமையற்காரன் ஒரு தட்டில் அவனுக்குச் சாப்பாடு கொண்டு வந்து வைத்தான். அங்கே வந்த பின் ரமாகாந்துக்கு நேர்த்தியான சாப்பாடு கிடைத்து வந்தது. பசித்தாலும் பசிக்காவிட்டாலும் அவன் வேளை தவறாமல் சாப்பிட்டு வந்தான். ஆனால் அன்றைக்கு ஏனோ அவனுக்குச் சாப்பாடு வேண்டி யிருக்கவில்லை. பத்மாவைப் பார்ப்பதற்கு வழி புலப்படாத காரணமோ என்னமோ, அவனுக்கு எதைக் கண்டாலும் எரிச்சல் எரிச்சலாக வந்தது. சமையற்காரன்மீதும் அவன் எரிந்து விழுந்தான். பாவம், சமையற்காரன் பயந்து போய்ப் பதில் பேசாமல் வெளியே அங்கிருந்து நழுவி விட்டான்.

ரமாகாந்த் 'அங்கிருந்து நழுவுவது எப்படி?' என்ற விஷயத்தில் மூளையைச் செலவிட்டுக் கொண்டே, வராந்தாவில் இங்கும் அங்கும் உலாவலானான். அதே சமயம் இரும்பு முள் வேலிக்கு அப்பால், மாந்தோப்பில் மரங்களின் மறைவில் யாரோ ஒருவன் நின்று கொண்டு தன்னையே உற்று நோக்கிக் கொண்டிருப்பது போலப் பட்டது. அது மட்டுமில்லை, அவன் கைச் சாடை காட்டி தன்னை அருகில் அழைப்பதுபோலவும் தோன்றியது. உடனே ரமாகாந்தின் மார்பு 'படபட'வென்று அடித்துக் கொள்ள ஆரம்பித்து விட்டது. 'திருடர்கள் அவனுடைய உயிரை வாங்க ஏதாவது சதி செய்வார்களோ?' என்ற பயம் அவனுக்கு

எப்பொழுதுமே இருந்து வந்தது. ஆகையால் இரவு வேளைகளில் அவன் தன் அறையை விட்டு வெளியே வருவதேயில்லை. தற்காப்பு எண்ணம் அவனை உள்ளே போய் விடுமாறு தூண்டிற்று. அப்பொழுதுதான் ஒரு மோட்டார் சாலை வழியாகப் போயிற்று. அதன் விளக்கு வெளிச்சத்தில் பார்த்த பொழுது, அந்த நிழலுருவம் ஒரு பெண்ணினுடையது என்பது அவனுக்குத்தெரிய வந்தது.

அந்த உருவம் அணிந்திருந்த புடவையும் நன்றாகத் தெரிந்தது. அந்தப் பெண்ணுருவம் தன்னை நோக்கி வருவது போலத் தோன்றவே, அவனுக்கு 'யாராவது ஆண் பிள்ளைதான் இப்படி வேஷம் தரித்து நம்மை வஞ்சம் தீர்க்க வருகின்றனோ' என்ற அச்சம் எழுந்தது. ஆகவே அவன் சிறிது பின் நகர்ந்தான். அவன் பின் நகர நகர அந்த உருவம் ஒவ்வொரு அடியாக முன்னேறிக் கொண்டே வந்தது. கடைசியில் அது முன்வேலிக் கருகில் வந்து நின்று கொண்டு, ஏதோ ஒரு பொருளை அவன் பக்கம் வீசி விட்டெறிந்தது. ரமாநாத் வீறிட்டுக் கொண்டு பின்னால் துள்ளிக் குதித்தான். ஆனால், அது ஒரு கவர் என்று தெரிய வந்தது. அப்புறம்தான் அவனுக்குச் சற்றுத் தைரியம் பிறந்தது. பிறகு அவன் எதிரே பார்த்தான். அதற்குள் அந்த உருவம் அவன் கண்களிலிருந்து மறைந்து இருட்டோடு இருட்டாகக் கலந்து விட்டது. ரமாநாத் சடக்கெனக் குனிந்து அந்தக் கவரைக் கையில் எடுத்துக் கொண்டான். அவனுக்கு ஒருபுறம் அச்சம்; இன்னொரு புறம் அவா. அச்சம் குறைவு; ஆனால் அவாவோ அதிகம். கவரை மிகவும் ஜாக்கிரதையாக மறைத்து வைத்துக் கொண்டு, தன் அறையை அடைந்தான்.

பிறகு அறையின் இரு புறத்துக் கதவுகளையும் அழுத்திச் சாத்தித் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு கவரைப் பிரிப்பதற்காக எடுத்தான். அதில் விலாசம் எழுதியிருந்த கையெழுத்து அவனுக்கு மிகவும் பழக்கப்பட்டது போலிருந்தது. 'அது பத்மாவின் கையெழுத்து!' என்பது நினைவுக்கு வந்ததும் அவனுக்கு உண்டான மகிழ்ச்சிக்கு ஓர் அளவில்லை. உடனே கவரைப் பிரித்தான். பத்மாதான் அதை எழுதியிருந்தாள். அந்தக் கடிதத்தை ஒரே மூச்சில் படித்து முடித்துவிட்டு அவன் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான். அந்த மூச்சுடனேயே, ஆறுமாத காலமாக அவன் ஆத்மாவை அழுத்திக் கொண்டிருந்த கவலையும், வாழ்வின் ரத்தத்தை அட்டைபோல உறிஞ்சிவந்த மனத் துயரமும் வெளியேறி விட்டன. அவனை ஆட்டி வைத்துக் கொண்டிருந்த மனோ பலவீனம், துயரம், அச்சம், நாணம் முதலிய அனைத்தும் அவனை விட்டு அகன்றுவிட்டன; அடுத்த கணமே அவன் உள்ளத்தில் ஒருவித உற்சாகம், உல்லாசம், தன்னம்பிக்கை முதலியவைகள் குடிகொண்டன. இப்பொழுதே ஸப் இன்ஸ்பெக்டரிடம் ஓடிப்போய், 'என்னை இந்த வழக்குடன் சம்பந்தப் படுத்தாதீர்கள் என்று கண்டிப்பாய்ச் சொல்லி விட்டால் என்ன?' என்று எண்ணினான்.



ஆனால் அடுத்த கணமே, 'சாட்சியமோ முடிந்து விட்டது. கிடைக்க வேண்டிய கெட்ட பெயர் கிடைத்தும் விட்டது. இனிமேல் ஏற்படப் போகும் பலாபலன்களை வேண்டாம் என்று சொல்லுவானேன்? — எல்லாருமாகச் சேர்ந்து கொண்டு நம் மூளையை ஒரேயடியாகக் குழப்பி விட்டார்களே! இன்னும் நம்மை எதற்காகக் காவல் கைதிபோல நடத்துகிறார்கள்! வெல்லமாகப் பேசுகிறார்களே தவிர இன்னும் அவர்களுக்கு நம்மீது நம்பிக்கை ஏற்பட்டதாகத் தெரியவில்லையே! இதை ஒரு சாக்காக வைத்துக் கொண்டு, நாம் நம்முடைய சாட்சியத்தை மாற்றி விட்டால், தானாகக் 'குட்டு' வெளிப்பட்டுப் போகிறது! எனக்கு ஒரு வேலையும் தரமாட்டேன் என்று சொல்லுவார்கள்; அவ்வளவுதானே! இவர்கள் தரவேண்டாமே! ஆனால் இவர்கள் கட்டியிருக்கும் கோட்டைகள் எல்லாம் தகர்ந்து மண்ணோடு மண்ணாகக் கலந்து விடுமல்லவா? நம்மை ஏமாற்றியதற்குப் பழிக்குப் பழி வாங்கினாலே நமக்குப் பரம திருப்தி! அது மட்டும் அல்ல; என் பெயரும் கெடாது......ஆனால் போலீஸார்கள் பொல்லாதவர்கள் ஆயிற்றே! ஏதாவது குறும்புத்தனம் செய்து நம் மீது பொய் வழக்குத் தொடர்ந்தால் ......? நாம் இங்கே தங்கினால்தானே இவர்கள் நம் மீது குற்றம் கண்டு பிடிப்

யதற்கு? இவர்கள் எல்லோருடைய கண்களிலும் மண்ணைத் தூவிவிட்டு ஊருக்குப் போய் உட்கார்ந்துவிட்டால் போயிற்று! இந்தக் கேஸில் தோற்றுவிட்டால், அவர்களால்தான் தலைகூடத் தூக்க முடியாதே! அவ்வளவு அவமானப் பட்டல்லவா போய் விடுவார்கள்!......

ஆனால் அப்படி யெல்லாம் செய்து பிரயோசனமில்லை. இவர்களை எப்படியாவது மிரட்டி ஒரு நல்ல வேலையாக வாங்கிக் கொள்ளுவதுதான் புத்திசாலித்தனமான காரியம். வேலை கிடைப்பதா யிருந்தால் தான் சாட்சியம் சொல்லுவேன்; இல்லாவிட்டால் முடியாது. எனக்கும் இந்த வழக்குக்கும் ஸ்நானப் பிராப்திகூட இல்லை என்று சொல்லிவிடுவேன் என்று பயமுறுத்தி இவர்களிடம் இப்பொழுதே காரியத்தைச் சாதித்துக்கொள்ள வழி தேட வேண்டும். இல்லா விட்டால் அப்புறம் இவர்கள் எங்கேயாவது ஒரு பட்டிக்காட்டுப் போலீஸ் ஸ்டேஷனில் ரைட்டராகப் போட்டு நம்மை ஏமாற்றினாலும் ஏமாற்றி விடுவார்கள்! 'நாளைக் காலை பத்து மணிக்குள் குறைந்தது இன்ஸ்பெக்டர் வேலையாவது தந்து விட்டோம் என்று உத்தரவு வரவேண்டும். இல்லாவிட்டால் உங்கள் காரியத்தைக் குட்டிச்சுவராக்கி விடுவேன்' என்று சொல்லி விடுவது என்று நினைத்துக் கொண்டு, ஸப் இன்ஸ்பெக்டரைப் பார்த்து வருவதற்காகப் புறப்பட்டான். ஆனால் இரண்டு எட்டுக்கள் எடுத்து வைப்பதற்குள்ளாகவே மனம் மாறி நின்றுவிட்டான். 'ஸப் இன்ஸ்பெக்டரைப் பார்ப்பதற்கு முன்னால் ஒரு தடவை பத்மாவைப் பார்த்துப் பேச வேண்டும்' என்ற அவா அவன் உள்ளத்தில் எழுந்தது. பத்மாவிடத்தில் இவ்வளவு அன்பு, இவ்வளவு பிரேமை, இவ்வளவு பற்றுதல், இவ்வளவு சிரத்தை அவனுக்கு இதுவரை ஏற்பட்டதே யில்லை. 'தெய்வ சங்கற்பத்தினால்தான் அவள் தன் உதவிக்காக இந்தச் சந்தர்ப்பத்தில் வந்திருக்கிறாளோ?' என்ற எண்ணம்கூட அவனுக்கு உதித்தது.

மணி பத்து அடித்துவிட்டது. ரமாநாத் மின்சார விளக்கை அணைத்தான். பிறகு வராந்தாவுக்கு வந்து, தன் அறைக் கதவை அடைத்து சாத்தினான். காவற்காரர்களெல்லோரும், அவன் தாழ்ப்பாள் போட்டுக்கொண்டு தூங்கப் போய்விட்டான் என்று எண்ணவேண்டும் என்பது அவன் நினைப்பு. ஆகவேதான் அவன் கதவை அப்படி ஓங்கி அறைந்து சாத்தினான். ஒரு நிமிஷ நேரம் இருளடைந்த வராந்தாவில் நின்று, 'யாராவது வருகிறார்களா?' என்று பார்த்தான். ஒருவரும் வராமற் போகவே மெதுவாக இறங்கி அந்த முள் வேலிக்கு அருகில் சென்றான். 'எப்படி அதைத் தாண்டுவது?' என்று அவனுக்குப் புரியவில்லை. 'ஒரு வேளை பத்மா அந்தத் தோப்பில் தங்கியிருப்பாளோ? பத்மாவுடன்கூடத் தேவிநீனும் வந்திருக்க வேண்டும். அவள் ஒண்டியாக வந்திருக்க முடியாது. அந்தத் தோப்புக்குள் எப்படிப் போவது?' என்று அவன் யோசிக்கலானான். அந்த வேலிதான் அவனைப் போக வொட்டாமல் தடுத்துக் கொண்டிருந்தது. அதைத் தாண்டிப் போவது என்பது முடியாத காரியம்.

ஆகவே அவன் கம்பிகளின் இடுக்கு வழியாகப் புகுந்து போய் விடுவது என்று நிர்மானித்தான். உடனே தன் ஆடைகளைச் சுருட்டி மடக்கிக் கொண்டு, கம்பிகளையும் கொஞ்சம் விலக்கி விட்டுக் கொண்டு குனிந்து, சர்வ ஜாக்கிரதையாகக் கம்பிகளின் இடுக்கில் தலையை நுழைத்தான். அவ்வளவு முன் ஜாக்கிரதையாக இருந்தும்கூட அவனுடைய ஆடைகள் கம்பிகளில் மாட்டிக் கொண்டு விட்டன. அவைகளை எடுப்பதற்காக அவன் கையை எடுத்தான். அதற்குள் சட்டை கம்பிகளில் மாட்டிக் கொண்டு விட்டது. வேஷ்டி, சட்டை இரண்டுமே முட்களில் மாட்டிக் கொண்டுவிடவே, அவன் மிகவும் சங்கடத்தில் சிக்குண்டான். இந்தப் பக்கமும் வர முடியவில்லை; அந்தப் பக்கமும் போக முடியவில்லை, சற்று அவசரப்பட்டால் முட்கள் உடலைக் கிழித்துவிடும். என்ன செய்வான், பாவம்!

இந்தச் சமயம் ஆடைகள் அவனுக்கு ஒரு லட்சியமாகத் தோன்றவில்லை. அவன் மெதுவாகக் கழுத்தை அந்தப் பக்கம் நீட்டினான். வேஷ்டியும் சட்டையும் தாறுமாகக் கிழிந்தன. எப்படியோ வேலியைத் தாண்டி விட்டான். ஆனால் முதுகில் சில இடங்களில் முட்கள் ஏறி விட்டன. ஒரே எரிச்சலாக எரிந்தது. எதையும் அவன் சிறிதும் பொருட்படுத்தவில்லை. கிழிந்த மப்ளரைத் தலையில் சுற்றிக் கொண்டு, அவன் தோப்புக்குள் சுற்றி வரலானான். எங்கும் ஒரே அமைதி நிலவியிருந்தது. தோப்புக் காவற்காரன் சாப்பிடப் போயிருந்தான் போலும். அவன் மிகவும் மெதுவான குரலில், நான்கைந்து தடவைகள் 'பத்மா, பத்மா' என்று

குரல் கொடுத்துப் பார்த்தான். ஆனால் எங்கிருந்தும் மறு மொழி வராமற்போகவே அவனுக்கு ஒரே ஏமாற்றமாய்ப் போய் விட்டது. இருந்தாலும் ஆசை விடவில்லை. இரண்டொரு மரங்களுக் கருகில் போய்ப் பார்த்தான். 'பத்மா வீட்டுக்குப் போயிருப்பாள்' என்று தோன்றவே, அதே மூச்சில் அவன் தேவீதினுடைய வீட்டை நோக்கிப் புறப்பட்டான். 'நான் பங்களாவிலிருந்து வெளியேறி விட்டேன் என்று யாருக்காவது தெரிந்து விட்டால் ...? தெரிந்தால் என்ன? போலீஸ் காரர்களால் என்னை என்ன செய்துவிட முடியும்? நான் அவர்களுடைய கைதியோ அடிமையோ இல்லையே!' இன்று அவன் தன் மனதைச் சமாதானப் படுத்திக் கொண்டான்.

நள்ளிரவு ஆகிவிட்டது. தேவீதின் அரை மணி நேரத்துக்கு முன்புதான் வீட்டுக்குத் திரும்பி யிருந்தான். ரமாகாந் போன பொழுது அவன் தன் கைகால்களை அலம்பிக் கொண்டு சாப்பிடுவதற்காகப் புறப்பட்டுக் கொண்டிருந்தான். உடம்பில் கிழிந்த துணிகளுடன் நிற்கும் ஒரு வெற்று மனிதனைக் கண்டதும், தேவீதின் ஒரு கணம் திகைத்துப் போய் விட்டான். அவனைப் பயமுறுத்த வேண்டும் என்று ரமாகாந் வேண்டுமென்றே தலையில் மப்ளரைப் புது விதமாகச் சுற்றி யிருந்தான்.

தேவீதின் அச்சம் தொனிக்கும் குரலில், "யார் அது?" என்று கேட்டான். ஆனால் அடுத்த கணமே ஆளை அடையாளம் புரிந்து கொண்டு, ஒரே தாவாகத் தாவிக் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு "என்ன தம்பி, இது! நல்ல வேஷம் போடுகிறாயே! வேஷ்டி சட்டையெல்லாம் ஏன் இப்படி ஆயிற்று?" என்று கேட்டான்.

"முள் வேலியில் நுழைந்து வந்தேன். முட்களில் மாட்டிக் கொண்டு எல்லாம் கிழிந்து விட்டன!"

"என்ன? முள் உடம்பைக் கிழிக்க வில்லையே!" என்று அனுதாபத்துடன் தேவீதின் கேட்டான்.

"அதிகமாக இல்லை; இரண்டொரு இடங்களில் லேசாகக் கீறிவிட்டது. எவ்வளவோ ஜாக்கிரதையாகத்தான் நுழைந்தேன். இருந்தாலும் என்ன செய்வது?"

"அம்மா எழுதியிருந்த கடிதம் கிடைத்ததா?"

"அப்பொழுதே பார்த்து விட்டேன். ஆமாம், அவன் உன்னோடு வந்திருந்தானா?"

## தேனி நாடார் சரஸ்வதி உயர்தர கலாசாலை அபிவிருத்தி நிதிக்காக



# ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி

## உதவும் சங்கீதக் கச்சேரி

★

ஆஸ்தான வித்வான்

| | | |
|---|---|---|
| மைசூர் டி. சௌடய்யா | ... | பிடில் |
| கல்பாத்தி ராமனாதன் | ... | மிருதங்கம் |
| ஆலங்குடி ராமச்சந்திரன் | ... | கடம் |

**20-2-48 வெள்ளி மாலை 5-30 மணிக்கு**

**தேனி, நாடார்**

**சரஸ்வதி ஹைஸ்கூல் காம்பவுண்டில்**

ரஸிகமணி ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள்
தலைமை வகிப்பார்கள்

டிக்கெட்டுகள் : ரூ. 250/: 100/: 50/: 25/: 10/:
நாடார் சரஸ்வதி உயர்தரக் கலாசாலைக் கமிட்டி, தேனி
ஒலி பெருக்கி : திருச்சி ரேடியோ ஸேல்ஸ் & ஸர்விஸ்.

குறிப்பு :—முந்தனவே 30-1-48 அன்று ஏற்பாடு செய்யப்பட்டிருந்த கச்சேரி 20-2-48 தேதிக்கு ஒத்தி வைக்கப்பட்டது.

---

# கோல்கேட்

சுவாசத்தையும் பற்களையும் சுத்தப்படுத்துகின்றது

உங்களது பற்களை கோல்கேட் முறையால் தினசரி இரண்டு முறை சுத்தம் செய்யுங்கள்.

- பற்களை வெண்மையாகவும் உறுதியாகவும் இருக்கச் செய்கிறது. சொத்தையாவதைத் தடுக்கிறது.
- ஈறுகளை ஆரோக்ய நிலையிலும் வலுவாகவும் வைக்கிறது. பயோரியாவினின்றும் காப்பாற்றுகிறது.
- வாயை சுத்தமாகவும் புதுமையாகவும் செய்கிறது. துர்நாற்றத்தை அறவே ஒழிக்கிறது.

கோல்கேட் பவுடரோ அல்லது கிரீமோ
உங்கள் இஷ்டப்படி வாங்கிக்கொள்ளலாம்






# உங்கள் வீட்டில் அடிக்கடி நோய்களுண்டா?



இங்கிலாந்து அல்லது அமெரிக்காவை ஒப்பிட்டுப் பார்க்கும்போது நமது நாட்டில் பெருவாரியான நோய்கள் எத்தனையோ அதிகமெனவே கூற வேண்டும். டைபாய்ட், வாந்தி பேதி, மலேரியா மற்ற ஜுரங்கள் இங்கே இவ்வளவு கொடிய உயிர்ச் சேதம் விளைவிப்பதற்கு ஒரு காரணம் என்ன வெனில், நாம் நமது வீடுகளில் நோய்ப் பரப்பிகளாகிய பூச்சி புழுக்களை நம்முடனேயே குடியிருக்க விடுவதுதான். ஈ, தெள்ளுப்பூச்சி, மூட்டை, கரப்பு, கொசு, பேன் இவை யாவும் ஆரோக்கியத்திற்கு பிராண சத்துருக்க ளென்பது நம்மில் உணருபவர்கள் வெகு சிலரே. உங்கள் வீட்டிலுள்ள இப் பீடைகள் மீது போர் தொடுங்கள்! விசேஷ சக்தி வாய்ந்த கீட நாசினி நீர்த்துவியாகிய டார்ச் பிராண்டால் அவைகளைத் தாக்குங்கள். செலவு வெகு சொற்பமே. ஆனால் ரொம்ப பயன் தரக்கூடியது. இன்றே கொஞ்சம் வாங்குங்கள்!

டார்ச் பிராண்ட் உபயோகித்து உங்கள் வீட்டிலிருந்து அசங்கியமும் அபாயகரமுமான பூச்சிகளை ஒழியுங்கள்




## சிறந்த பயன்!

# டார்ச் பிராண்ட்

சக்திவாய்ந்த கீடநாசினி திரவம்

(5% பூர்ண வீரியமுடைய DDT அடங்கியது)

மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும் நஷ்டமற்றது.

தயாரிப்பவர்கள்: பிராக்ரெஸ்ஸிவ் கெமிகல்ஸ் கார்ப்பொரேஷன் லிட்.

ஏகபோக விற்பனை ஏஜண்டுகள்: தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிட்.

இவள் ஆடைகள் இப்பொழுது
எவ்வளவு சுத்தமாகவும்
பளிச்சென்றும் காண்கின்றன

அது ஸன்லைட்டினால்
தான்!






# ஸன்லைட்
# சோப்

அடித்துத் துவைக்காமலே துணிகளை
வெண்மையாகச் சலவைசெய்கிறது

S. 96-111 TM




## ஆமாம்!

ஒருவர் :—என்னங்க ......... பார்த்தீங்களா? ஏழு கோடியே தொண்ணூத்திமூணு லட்சத்து, அறுபத்து மூவாயிரத்து, எழுநூத்திப் பதிமூணு 'டன்' தங்கம் இந்தியாவிலிருந்து வெளி நாட்டுக்கு ஏற்றுமதியாகியிருக்கிறதாம்! இன்னும் எவ்வளவு போகப் போகிறதோ, யார் கண்டது?

மற்றவர் :—இனிமே ஏதுங்க? தங்கம், சுவர்ணம்னு பேர் வச்சிக்கிட்டிருக்காங்களே, அவங்களைத்தான் கப்பலிலே அனுப்பி வைக்கணுமே ஒழிய, அனுப்பறத்துக்குத் தங்கம் இருந்தாலல்ல?



## குற்றம் செய்யாதவன்!

வக்கீல் :—உண்மையாகவே நீ குற்றம் செய்யவில்லையே?

கட்சிக்காரன் :—இல்லை; சத்தியமாக இல்லை!

வக்கீல் :—குற்றம் நடந்த தினத்தில் நீ ஊரில் இல்லை யென்று நிரூபித்தால் நல்லது. குற்றம் நடந்ததாகச் சொல்லும் சமயத்தில் யாராவது உன்னைப் பார்த்தார்களா?

கட்சிக்காரன் :—நல்ல வேளையாக என்னை ஒருவரும் பார்க்கவில்லை!

## அப்படியா?

"மூன்று மாதங்களாகத் தூக்கமில்லாமல் அவஸ்தைப்படுகிறேன், ஸார்!"

"அடாடா! நம்ம தெருவிலேயே மூணு டாக்டர்கள் இருக்கிறார்களே, யாரிடமாவது யோசனை கேட்கப்படாதோ?"

"அவர்களுக்குக் கொடுக்க வேண்டிய பாக்கியை நினைத்துத்தானே நான் தூக்கமில்லாமல் தவித்துக் கொண்டிருக்கிறேன்!"



## ரொம்ப சரி!

சாப்பிடுபவர் :—என் ஐயா, புடலங்காய்க் கறியில் ஏக உப்பைப் போட்டிருக்கிறீரே! உப்பு ரொம்ப மலிவாய்க் கிடைக்கிறதோ?

ஹோட்டல் சிப்பந்தி :—உப்பு ஒன்றும் மலிவு இல்லை; புடலங்காய்தான் ரொக்கியாக இருக்கிறது!



## அழுகையும் அடியும்!

பெரியவர் :—ஏண்டா பையா, அழறெய்?

பையன் :—அம்மா அடித்தாள், அதற்காகத் தான் அழுகிறேன்.

பெரியவர் :—அம்மா ஏன் அடித்தாள்?

பையன் :—நான் அழுதேன்; அதற்காக!

---

ALL WEATHER

5-RIB

GOODYEAR
ALL WEATHER

நம்பிக்கைக்கு
குட் இயர்
பான் பெல்டுகள்,
இதர மோட்டார்
சாமான்களையே
வாங்குங்கள்

# ஞாபகமிருக்கட்டும்

உலகிலேயே ஆகிருதி வாய்ந்த ஜெயண்ட் டயர்கள்
அகவிலையைவிடக் குறைந்தே இருக்கும்

## அதனுல்தான்

உலகத்தின் எல்லா பாகங்களிலும் அதிகமான எடையைச் சுமந்து செல்ல
இதர டயரைவிட குட் இயர் ஜெயண்ட் டயர்கள் உபயோகிக்கப்படுகின்றன




FIRST IN PERFORMANCE AND PREFERENCE THE WORLD OVER

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press.
116-119, Sladen's Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.

REGD. NO. M. 4332







ராஜா
ஸ்னோ
ஹேர் ஆயில்
கஸ்தூரி சோப்






FAS-10

MANYAM & CO., BANGALORE * MADRAS * BOMBAY *

பம்பாய் ஆபீஸ்: 142, ஓல்டு மோதி ஸ்ட்ரீட், போர்ட். இலங்கைக்கு சோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள்:
மெஸர்ஸ். துரை. அருள் & கோ., லிட்., 93, கெய்ஸர் தெரு, கொழும்பு

"இல்லை, நான்தான் அவர்களுடன் வந்திருந்தேன். அன்றைக்கு மோட்டாரில் நீ வந்ததைப் பார்த்துவிட்டு, 'போக வேண்டும், போக வேண்டும்' என்று நச்சரித்து விட்டார்கள்."

"ஆமாம், நீதான் ஊருக்குக் கடிதம் எழுதி அவனை இங்கே வரவழைத்தாயோ?"

"நான் கடிதமும் எழுதவில்லை, கிடிதமும் எழுதவில்லை. அவர்களாகவே தான் வந்தார்கள். 'அவர்களுக்கு என் விலாசம் எப்படித் தெரிந்தது' என்று எனக்கே ஆச்சரியமாய்ப் போய் விட்டது. அப்புறம் தான் அவர்கள் சொன்னார்கள். உனக்குப் பரிசு கிடைத்ததே, அந்தச் சதுரங்கப் படம் அவர்கள் அனுப்பியதுதானாம்!" என்று தேவீதின் விஷயத்தை விவரமாக விளக்கிச் சொன்னான்.

ரமாகாந்தின் கண்கள் ஆச்சரியத்தினால் அகல விரிந்தன. பத்மாவின் சாமர்த்தியத்தை நினைத்துப் பார்க்கப் பார்க்க அவனுக்கு வியப்புத் தான் மேலிட்டது. அது மட்டும் அல்ல; தனக்கு ஏற்பட்ட தோல்வியை எண்ணி ஒரு புறம் அவனுக்கு வருத்தமாகவும் இருந்தது. அவனுக்கு எதை எடுத்தாலும் இம்மாதிரிப் படுமோசமாகவா தோல்வி ஏற்பட வேண்டும்?

கிழவி மாடியில் பத்மாவுடன் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தாள். தேவீதின் மாடிப் படியருகில் சென்று, "ஏய், அங்கே என்ன செய்கிறாய்? 'யாரோ பார்க்க வந்திருக்கிறார்கள்' என்று அம்மாவிடம் சொல்லு!" என்றான்.

பிறகு அவன் ரமாகாந்தின் கையை இறுகப் பிடித்துக் கொண்டு, "மாட்டிக் கொண்டாயா, தம்பட்டிக்காய் பட்டரே! வா, வா! அம்மாவின் கோர்ட்டில் உன்னை ஆட்டி வைத்து விடுகிறேன்! சர்க்கார் தரப்பில் சாட்சி சொல்லவா போகிறாய்?" என்று பரிகாசம் செய்தான்.

ரமாகாந்துக்கு வந்தபொழுது இருந்த ஆர்வம் இப்போது அடங்கிவிட்டது. வெட்கத்தினால் குனிந்த தலை நிமிராமல் நின்றான். பத்மாவின் கேள்விகளுக்கு அவன் என்ன பதில் சொல்லுவான், பாவம்! எதற்காகப் பயந்து அவன் வீட்டை விட்டே ஓடி வந்தானோ, கடைசியில் அதனிடமே யல்லவா மாட்டிக் கொண்டு தன் தோல்வியை ஒத்துக் கொள்ளும்படி ஆகி விட்டது! அவன் பத்மாவைத் தலை நிமிர்ந்து எப்படிப் பார்ப்பது? அவன் தன் கைகளை விடுவித்துக் கொண்டு, அடிப் படியிலேயே நின்று விட்டான்.

"ஏன் அப்பா, நின்று விட்டாய்? உயரே வா!" என்று அழைத்தான் தேவீதின்.

ரமாகாந்த் தலையைச் சொறிந்து கொண்டே, "நீ முன்னால் போ; நான் பின்னால் வருகிறேன்" என்றான்.

கிழவி மேலிருந்தவாறே, "'அவன் யார்? எங்கே யிருந்து வந்திருக்கிறான்?' என்று கேட்டுச் சொல்லுங்கள்!" என்றாள்.

"என்னிடம் சொல்ல முடியாது; அம்மாவிடம்தான் சொல்லுவேன் என்கிறான்!" என்று தேவீதின் வேடிக்கை செய்தான்.

"ஏதாவது கடிதம் கொண்டு வந்திருக்கிறானோ?"

"இல்லை."

அப்புறம் சிறிது நேரம் அமைதி நிலவியது. பேச்சு மூச்சில்லை. "அப்படியானால் நான் அவனைப் போய்விடச் சொல்லட்டுமா?" என்று கேட்டான் தேவீதின்.

பத்மா படியருகில் வந்து, "யார் என்று தான் கேட்கிறேனே!" என்றாள்.

"ரொம்ப தூரத்திலிருந்து வந்திருக்கிறதாகச் சொல்லுகிறான்."

"அவன் எங்கே?"

"இதோ நிற்கிறான்!"

"அப்படியானால் இங்கே வரச் சொல்லுங்கள்!" என்றாள் பத்மா.

ரமாகாந்த் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டு, தயங்கித் தயங்கி நாணிக் கோணிக் கொண்டு ஒருவித அச்சத்துடன் படியேறினான். பத்மா அவனைப் பார்த்ததும் அடையாளம் தெரிந்து கொண்டு, இரண்டடி பின் நகர்ந்தாள். தேவீதின் மட்டும் அங்கே இல்லாமலிருந்தால் அவள் இரண்டடி முன் வந்திருப்பாள்; பின் நகர்ந்திருக்க மாட்டாள்.

அவளுடைய கண்களில் இதுவரை இத்தனை கவர்ச்சியும் வெறியும் ஏற்பட்டதில்லை; அவயவங்களில் இவ்வளவு புல்லரிப்பு ஏற்பட்டதில்லை; கன்னங்களில் இவ்வளவு கலை சொட்டியதில்லை; உள்ளத்தில் இம்மாதிரி இன்பத் துடிப்பு ஏற்பட்டதில்லை. இன்றுதான் அவளுடைய நீண்ட காலத் தவம் வெற்றிபெற்றது! (தொடரும்)